உயர்திரு அருட்செல்வர் கலைஞர்
ஏ. பி. என். அவர்களுக்கு.

அன்புடன்

ரா. கந்தசாமி.



அணிந்துரையாளர் :

கவிஞர் திருமிகு. உளுந்தூர்பேட்டை **சண்முகம்,**

M. A., M. Litt. அவர்கள்

தமிழ் விரிவுரையாளர்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்



மு. காண்டீபன்

அன்பிற்கு இவன் ஓர் இலக்கணம்,

அவனுக்கு இந்நூல் சமர்ப்பணம்.



# அணிந்துரை

"ஆத்மாவுக்கு இறப்பில்லை, என்பதை நான் அறிவேன். என் ஆத்மாவை நானே கொன்றுவிட்டேன். இது ஒரு இறந்த ஆத்மாவின் கதை". எனக் கதைத்தலைவன் கூறுமாறு கதையை முடிக்கிறார் நண்பர் இரா. கந்தசாமி அவர்கள். "தவறுவது மனித இயற்கை. மன்னிப்பது தெய்வீகப் பண்பு." என்பது ஆங்கிலப்பழமொழி. தான் செய்த தவறுகளைத் தானே உணர்ந்து, திருந்த முடியாத நிலையிலும் வருந்தவாவது செய்தால் மனிதன் வாழ்க்கை பீடு பெறும் என்பது வள்ளுவம்.

உடலின்பங்களில் திளைத்து உயிர்க்கூறுகளையும் அழித்துக்கொண்டு, வந்த வழியினின்றும் தவறி, வர இருக்கும் பாதையையும் மறந்து, உடல் செத்து, உயிர் சிந்தி, உணர்வழிந்து போகும் மாந்தர் பலர். நண்பர் படைத்த தலைவனும் தலைவியும் உடலழிந்தாலும் உயிர் அழியாதவர்கள். சமுதாயம் என்கிற தீப்பொறியில் சிக்கிக் கொண்ட மெழுகுவர்த்தித் திரி தன் உடலாகிய மெழுகை உருக்குலைத்துக் கொண்டாலும் சுடர்தந்து மறைந்து போகும் அனுபவத்தைப் பெறுவது போல, நண்பர் படைத்த தலைமகனும் தன் வாழ்

வில் இருளைத் தழுவிக் கொண்டாலும், சமுதாயத்திற்கு ஒளிதரும் உணர்ச்சியைப் பெறுகின்றான். அதனால் தான் “இறந்த ஆத்மா பேசுகிறது”! அந்தப்பேச்சு நண்பர் கந்தசாமி அவர்களின் நெஞ்சக் கனலிலிருந்து பட்டுத்தெறிக்கும் எண்ணச் சுடர்வீச்சாக-எழுத்தோவியமாக-புதிய வரலாறு படைக்கும் புதினமாக, தாழ்வுற்று வறுமைமிஞ்சி விடுதலைத் தவறிக் கெட்டுப் பாழ்பட்டுப் போய்க்கொண்டிருக்கும் தமிழ்ச் சமுதாயத்திற்குச் சவுக்கடியாக, பண்பைக் காக்கும் போராட்டமாக (பக்கம்–90) அமைந்து எழுச்சியூட்டிச் சிந்திக்க வைக்கிறது.

எண்ணத்தில் ஒரு புதுமை, எழுத்தில் ஒரு ஆவேசம், திண்ணமான கொள்கைப் பிடிப்பு, சிந்தனையும் செயலும் ஒன்றாக வேண்டுமென்ற உயிர்த்துடிப்பு, அருமையான புதிய உவமைகள், நெஞ்சை உலுக்கும் பாத்திர அமைப்பு, கதையைத் தொடங்கி முடிக்கும் கட்டுக்கோப்பு, அத்தனையும் இக்கதையில் அமைந்து புதின இலக்கியத்தில் ஒருபுரட்சியைத் தொட்டுக் காட்டுகிறது.

தமிழன் ஒரு காலத்தில் ஊரெல்லாம் சுற்றித் தன் புறநாகரிகத்தையும், அக நாகரிகத்தையும் உலகெலாம் எடுத்துச் சொன்னான். ஆனால் இன்றோ உலகம் சுற்றியவன், பஞ்சையாய்ப், பராரியாய், அகதியாய், அனாதையாய், ஆதரவற்றுத் தாயகம் திரும்புகிறான். உள்நாட்டுத் தமிழனோ நெஞ்சில் உரமுமின்றி, நேர்மைத் திறனுமின்றி வஞ்சனைகள் செய்து வாழ்வு நடத்திக்கொண்டிருக்கிறான். இளைய உலகத்தில் இருந்து கொண்டு பழைய உலகத்தைப் பார்க்கின்ற பக்குவம்

பெற்ற பண்பாளராய், அறனறிந்து மூத்த அறிவுடைய முதியோராய்க்கதாசிரியர் அவர்கள் திகழ்வது விந்தையாகவே உள்ளது! ஒடிந்து போகும் கால்களுக்கு ஊன்றுகோலாய் உதவ நண்பரைப்போல நான்குபேர் வந்தாலும் தமிழ்நாடு பிழைத்துக்கொள்ளும்.

"வாழ்க்கை குறுகியது. ஆகவே உங்கள் எண்ணமும் குறுகியதாக இருக்கக்கூடாது. அது விரிந்து இருக்கட்டும்". (பக்கம்–10)

"கொஞ்சங்கூடச் சம்பளம் வாங்காமல் எவ்வளவு ஒழுங்காகத் தன் கடமையைச் சேவல் செய்கிறது".
(பக்கம்–44)

"ஒரு பெண் தவருய் நடக்க ஆரம்பித்தால் அவளால் ஆயிரம் ஆண்களையும் கெடுக்க முடியும்".
(பக்கம்-54–55)

"இந்த உலகமக்கள் உயர்ந்த அழகான பொருளை ஆசையோடு பார்த்துக் கொண்டிருப்பார்கள். மிக மோசமான பொருளையும் அருவருப்போடு பார்த்துக் கொண்டிருப்பார்கள். இனிப்பைச் சுற்றும் ஈக்கள் அசிங்கத்தைக் கண்டாலும் வலம்வருகின்றனவே!"
(பக்கம்–84)

"நித்திரை சாவின் ஒத்திகை. துஷ்டச் செயல் புரிவது குஷ்டம் பெறப் போவதின் ஒத்திகை".
(பக்கம்–82)

;கைய ஒளி முத்துக்கள் இக்கதையில் எண்ணில.

“நத்தை செல்லும் பாதையெல்லாம் ஈரத்தை ஏற்படுத்திச் செல்வது போல நான் நடந்து வந்த பாதையெல்லாம் ஈரப்புள்ளிகள் விழுந்திருந்தன. எல்லாம் என்காலின் புண்களில் இருந்து வடிந்த சீழால் ஏற்பட்ட புள்ளிகள்தாம் அவை”. (பக்கம்-76)

எழுத்துக்களை ஓவியமாக்கிக் காட்டும் ஆசிரியரின் கைவண்ணப் பதத்திற்கு இந்த ஒருசோறு போதும்! நல்ல நண்பர் ஒருவரை அறிமுகப்படுத்தி வைத்த சிவகாமி அச்சக உரிமையாளர், கெழுதகை நண்பர் உயர்திரு. ஜி. இராசசுந்தரம், எம். ஏ., எம். லிட்.,

அவர்களுக்கு என் அன்பும் நன்றியும்!

வாழ்க நண்பர் கந்தசாமி அவர்கள்!

வளர்க அவர்தம் கலைப்பணி!

அன்பன்,

சீனிமுத்து

123, கனகசபைநகர்,

சிதம்பரம்

# என்னுரை



உலகப்பொருள்களைக் கண்ணால் காணும்போது காட்சியாகிறது. காதால் கேட்கும்போது செய்தியாகிறது. இரண்டும் கலக்கும்போது நிகழ்ச்சியாகிறது. நெஞ்சால் எண்ணும்போது எண்ணமாகிறது. பேனாவின் துணையை அவை பெற்றுவிட்டபோது எழுத்தாகிறது. சில எழுத்துகள் வார்த்தைகளையும், சில வார்த்தைகள் சிறுகதைகளையும், பல வார்த்தைகள் குறுநாவலையும், மிகப்பல வார்த்தைகள் நாவலையும் உதயமாக்குகின்றன. இன்பம் துன்பம் இரண்டையும் எழுத்து வடிவில் தாங்கி வருவது தந்தி. அதேபோல இன்பமும் துன்பமும் கலந்த ஒரு வாழ்க்கைப்போராட்டத்தினை, செங்கல் போன்ற வார்த்தைகளையும், சிமெண்ட் போன்ற உணர்ச்சிகளையும் கொண்டு, மாளிகையாகக் கட்டி முடிக்கலாம். அந்த மாளிகையின் மறுபெயர் நாவல் என்பது.

அப்படிப்பட்ட வாழ்க்கைப் போராட்டத்தில் உணர்ச்சிமிக்க வாலிபனாய் வாழ்ந்து உருக்குலைந்து, முதியவனாய் மாறி, இறந்தபோது ஈக்கள் பாட மறைந்துவிட்ட ஒரு மனித ஆத்மாவின் கதைதான் இது. கண்டதே காட்சி கொண்டதே கோலமென

மஞ்சத்தை, மங்கையை, மதுவை நாடி மயங்கி அலைந்த அந்த ஆத்மா இறந்தபிறகு இதில்பேசுகிறது. வாழ்வுக்குத் தேவையான வளமிக்க கருத்துக்களை, வாழ்ந்து கெட்ட முறைகளைக் கண்ணீர் வடியக்கூறுகிருன் கதாநாயகன். படைத்தவன் அவனைப்பற்றிக்கூறிறைல் பிதற்றுகிருன் என நீங்கள் எண்ணுவீர். ஆகவே நீங்களே அவனைச் சந்தித்துக்கொள்ளுங்கள்.

இத்தகு கருவைக்கொண்டு உருவான இந்த நாவலுக்குக் கவிஞர் திருமிகு. உளுந்தூர்பேட்டை சண்முகம் எம். ஏ; எம். லிட்., அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அந்தக் கவிஞரின் உயரிய பாடல்களை வாராஜா வா, திருமலை தென்குமரி போன்ற நல்ல படங்களில் கேட்டிருப்பீர்கள். எண்ணற்ற வேலைகளுக்கிடையே நாவலை முழுவதும் படித்து நன்முறையில் அணிந்துரையை அளித்த அந்த மதிப்பிற்குரிய பெரியவருக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதுஅச்சாகி வெளிவரக் காரணமாயிருந்த எனது மதிப்பிற்குரிய நண்பரும் சிவகாமி அச்சக உரிமையாளருமாகிய திருமிகு. ஜி. ராசசுந்தரம், எம். ஏ; எம். லிட்., அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இது அழகாக வெளிவரக் காரணமாயிருந்த சிவகாமி அச்சகத்தார்க்கும் அங்கு பணிபுரியும் என் அன்புச் சகோதரர்களுக்கும் நன்றி.

என் எழுத்துலக வழிகாட்டியும், குயில் இதழின் ஆசிரியரும், கவிஞரும், டாக்டரும்மாகிய திருமிகு.

கே. எம். ஏ. வஃகாப் அவர்களுக்கும் எனது நன்றி. அழகான அட்டைப்படத்தை வரைந்து கொடுத்துள்ள நண்பர் திரு. காழிசுந்தர் அவர்களுக்கு நன்றி. எனது முதற்படைப்பாகிய 'தேன்துளி'க்கு ஆதரவளித்த அனைவர்க்கும் நன்றி.

ஆண்டுக்கு மூன்று நூல் என்ற எனது உறுதிப்படி "அறுபது குஷ்டரோகிகளின் அந்தரங்க வாழ்க்கை", என்ற உண்மைக்கதையையும், "கண்ணீரில் மிதக்கின்றேன்", என்ற நாவலையும், "கல்லா? கடவுளா", என்ற நாடக நூலையும் அடுத்த ஆண்டு உங்கள் கையில் தவழச் செய்வேன். இந்த நாவலை அன்பிற்கு இலக்கணமாய் வாழ்ந்து, ஈரெட்டு ஆண்டில் மறைந்து விட்ட அன்பின் இலக்கணமாம் **மு. காண்டீபனுக்குக் காணிக்கையாக்குகிறேன்.**


உங்கள் ஆதரவைநாடும்,

**இரா. கந்தசாமி,**

208, வேளாண்மைக்கல்லூரி விடுதி,

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

# இறந்த ஆத்மா பேசுகிறது

இறந்தவன் ஏன் மறுபடியும் பேசுகிறான். இருப்பவர்கள் பேசுவதைக் கேட்கவே இன்னும் பத்துக் காதுகள் வேண்டுமே. இனி நீ பேசுவதைக் கேட்க, காதுக்கு எங்கே போவது? என்று கேட்டுவிடாதீர்கள். இருப்பவர்கள் பேசுவதில் அனைத்தும் உண்மையாக யிருக்காது. ஆனால் இறந்துவிட்ட நான் எல்லா உண்மைகளையும் சொல்லிவிடப் போகிறேன். நினைவு தெரிந்தது முதல், நான் இறந்தவரை, நடந்த அத்தனை தீச்செயல்களையும் சொல்லி விடுகிறேன். தாயின் மடியில் தவழ்ந்தபோது என் முகத்தில் புன்சிரிப்பு. பிறகு ஒரு மாதின் மடியில் இறந்தபோது என் உடம்பெங்கும் புண்களின் சிரிப்பு. இடையிலே நான் சிரித்தும் வாழ்ந்தேன். பிறர் சிரிக்கும் நிலையிலும் வாழ்ந்தேன். பிறரைச் சிரிக்கவும் வைத்துள்ளேன். பலரைச் சீரழித்தும் உள்ளேன். சுருங்கச் சொல்ல வேண்டுமெனில் நான் செய்த தவறுகள் அனைத்தையும்தான் சொல்லப்போகிறேன்.

ஏன் நீ நல்லதே செய்யவில்லையா? எனக் கேள்வி கேட்டுவிடாதீர்கள். கடுகளவு நல்லவற்றையும், மலையளவு தீயவற்றையும் செய்துள்ளேன். நான் செய்த

தவறுகளில் முக்கால்பங்கை யாருக்கும் தெரியாமல் தான் செய்தேன். செய்த தவறுகளில் கால்பங்கு மற்றவர்களுக்குத் தெரியும். ஆனால் நான் பணக்காரனாய் இருந்ததால் என் தவறுகளைப் பற்றி யாருமே பேசவில்லை. இறந்துவிட்ட ஒருவன் எவ்வளவு அயோக்கியனாய் வாழ்ந்திருந்தாலும், நல்லவன் செத்துப்போய்விட்டான் என்றுதான் எல்லோரும் சொல்கிறார்கள். அதைப்போலத்தான் தவறுகள் பல செய்த என்னையும், நல்லவன் என்று சமுதாயம் பாராட்டிக்கொண்டுள்ளது.

நான் ஒரு குன்றைத்தூக்கியிருந்தாலும், அவர் மலையையே தூக்கினார் என்று பொய்ப்பிரச்சாரம் செய்கிறது. நான்செய்த கடுகளவு நல்லசெயல்கள் மலையளவாய், மக்களால் நினைக்கப்பட்டும் பேசப்பட்டும் வருகிறது. இவைகளெல்லாம் போலி மக்களின் புகழ் வார்த்தைகள். இவைகளாளெல்லாம் என் ஆத்மா சாந்தி அடையவில்லை. செய்த தவற்றையெல்லாம் சொல்லி விட்டால்தான் என் ஆத்மா அமைதிபெறும். நடந்த தவற்றையெல்லாம் சொல்லப்போகிறேன். தவறுகள் நடந்தவிதம், நடக்கக்காரணம், அவைகளை எப்படித் தடுத்திருக்கலாம் என்பவற்றையெல்லாம் கூறப்போகிறேன். ஏனென்றால் பலவீனமில்லாத மனிதனையோ, தவறுசெய்யாத மனிதனையோ இந்தக் காலத்தில் காணமுடியாது. ஆக என் வாழ்க்கையில் நடந்த தீயவைகளை நான் கூறுவதால், என் வழியில் செல்ல ஆரம்பித்து இருக்கும் எத்தனையோபேர், திருந்த வழிபிறக்கும். தொடங்கியவர்கள் மேலும் தொடராமல் இருக்கத் துணைபுரியும்.

இவை, இவை, தீயவை எனக்காட்டும் விளக்குத் தான் என் பேச்சு. இதைக் கற்பூரவிளக்கு என்று நான் கூறவிரும்பவில்லை. ஏனென்றால், கெட்டவன் நான். இது உலுத்த மரத்தின் விறகைக்கொண்டு உருவான ஒரு பெருந்தீ. இந்தத் தீயில் உங்களுடைய கெட்டதையெல்லாம் போட்டுப் பொசுக்கி விடுங்கள். தீயவற்றிலிருந்து நற்பாதை என்ற சிமெண்ட் ரோட்டைக் கண்டுபிடிக்க உதவும் தீப்பந்தமாய் இதைக் கொள்ளுங்கள். சிமெண்ட் ரோட்டை அடைந்தவுடன் தூக்கி எறிந்துவிடுங்கள். சிமெண்ட் ரோட்டிலிருந்து தீயபாதைக்கு சிலர் செல்வார்களேயானால், நான் நெருப்பாய் இருந்து காலைச் சுட்டு, இவ்வழியில் செல்லாதே என எச்சரித்து விடுகிறேன். உன்னத புனித நிலையிலுள்ள பொன் போன்ற மனிதர்கள் இன்னும் புனிதமடைய விரும்பினால், அந்த அணைந்தகரி இருக்கிறதே அதில் நெருப்பேற்றி, அந்த நெருப்பில் சோதனை ஒன்று நடத்தி, இன்னும் புனிதமாகட்டும்.

முடிக்கட்டுமா முன்னுரையை? தொடங்கட்டுமா என் வாழ்க்கைக் கதையை? என்ன சொல்லுங்கள்? மௌனமாய் இருக்கிறீர்கள். தொடங்குகிறேன். ஏனென்றால் மௌனம் சம்மதத்தின் அறிகுறிதானே.

என் கதையைப் படிக்கும்போது சிலர் கண்ணீர் விடலாம். தயவுசெய்து எனக்காகக் கண்ணீர் விடாதீர்கள். நல்லவர்க்காகத்தான் கண்ணீர் விடவேண்டும். நான் அயோக்கியன். அந்தப் புனிதக் கண்ணீரை

விட்டு என்னை புனிதமானவனாக ஆக்கி விடாதீர்கள். நான் கெட்டவனாகவே இருந்து விடுகிறேன். எனக்காகக் கண்ணீர் விடுவதற்குப் பதிலாக நீங்கள் நல்லவர்களாக வாழ முயற்சி செய்யுங்கள். நீங்கள் உண்மையிலேயே எனக்காகப் பரிதாபப்படுகிறீர்கள் என்றால், அதைச் செய்யுங்கள். அப்போதுதான் இந்த ஆத்மா சாந்தியடையும்.

உண்மைகள் அனைத்தையும் சொல்லிவிட்டான். ஆகவே இவன் கடவுள், என்று என்னைக் கடவுளாக்கி விடாதீர்கள். தெருவெங்கும் சிலைகளை எழுப்பி விடாதீர்கள். கோவிலில் இருக்கும் சிலைகள் கல்லேயானாலும், அவை கருணைவடிவமானவை. அங்கே எங்குமில்லா அமைதி குடிகொண்டுள்ளது. என்னைக் கடவுளாகவும், சிலைகளாகவும், ஆக்கி அமைதி பெறவேண்டும், என்று எண்ணுவது மதுவைக்குடித்து விட்டு அமைதி அடைவோம், என்று கூறும் மனிதனின் கதைக்குச் சமமாக போய்விடும்.

தொடங்குகிறேன் பேச்சை. அடுக்குமொழியிலோ, அந்தரங்க வார்த்தையிலோ இருக்காது என் பேச்சு. அப்பட்டமாக, நடந்தவற்றை அப்படியே சொல்லுகிறேன். பொருளுண்டு, அருளுண்டு, மகவு இல்லையே என்று ஏங்கித்தவித்த ஒரு புனிதத்தாய்க்கு, அவளின் வயதான காலத்தில் கருவாகி, உருவாகி, மகவானவன்தான் நான். இளம்வயதில் அந்த புனித தெய்வத்தின் மடியில் கிடப்பேனும். அல்லது மஞ்சத்தில், மகிழ்வுடனே தூங்குவேனும். தரையிலே தவழ

அனுமதிப்பதே கிடையாதாம். பொன்னிற மேனியில் மண்பட்டால், உடம்பில் புண் தோன்றிடுமே என என் அன்னை அஞ்சித் தவிப்பாளாம். என் அன்னை தன் பூவிதழை என் கன்னத்தில்வைத்து, ராசா என்று முத்தம் இடுவார்களாம். இவன் பின்னால் பெரிய ஆளாய் ஆவான்யென்று அன்னை அடிக்கடி கூறிவந்தார்களாம். இவையெல்லாம் பக்கத்து வீட்டுப்பாட்டி சொன்ன கதை.

பின்னால் அயோக்கியத்தனத்தில் நான் ராசா தான். அக்கிரமம் செய்வதில் பெரிய ஆள்தான். என்னை என் அன்னை வீட்டின் இருளைப்போக்கும் விளக்காய் எண்ணினார்கள். நான் இருந்த வீட்டையே எரிக்க, தீப்பந்தமாய் மாறினேன். சரி, அனைத்தையும் இப்பொழுதே சொல்லிவிட்டேனே? நான்செய்த தவறுகள், அப்படிப் பிதற்றச் சொல்கின்றன. மன்னிக்கவும். எனக்கு ஐந்து வருடமானது. பள்ளியில் சேர்த்தார்கள். படித்துவாடா மகனே என என் அன்னை பள்ளிக்கு அனுப்பினார்கள். நான் மண்ணில் படுத்து விளையாடிவந்தேன். என்னடா துணியெல்லாம் அழுக்காய் இருக்கிறது? என என் அன்னை கேட்டாள். நான் மணலில் ‘அ’ எழுதுகிறேன். அந்த மணலின் அழுக்கு என் உடையில் பட்டுவிட்டது என்று பொய்கூறுவேன். உண்மையில் மணலே இல்லை பள்ளியில். ஆனாலும் என் அன்னையிடம் பொய் சொன்னேன். அது பள்ளி மணல் அல்ல. தெரு மணல். அங்கே நான் ‘அ’ எழுதவில்லை. வீடு கட்டி விளையாடித்தான் வந்தேன். பள்ளியே செல்லாமல்

விளையாடிவிட்டு, பள்ளிவிட்டவுடன் அந்த மாண வர்களுடன் சேர்ந்து வீட்டுக்குச் சென்றுவிடுவேன்.

பள்ளிக்குச்சென்று வந்துள்ளான்; அலுப்பாய் இருப்பான், என எண்ணி சுடுநீரில் குளிப்பாட்டி, சுண்ணும்புபோல் பவுடரைப் பூசி, வெளுத்த உடை யோடு, வேண்டாத பலவற்றைப் பூசி, என்னை அழகு பிம்பமாக்கி அன்னை ரசிப்பாள். நான் நடிப் பேன். அன்னையாம், என் தெய்வத்திடம் அப்படி நடித்தேன். அப்பாவிடம் பென்சிலுக்குக் காசு என வாங்கி, பெப்பர்மிட்டு வாங்கிச் சாப்பிட்டேன். இப் படியே ஆண்டு கழிந்தது. தேர்வு முடிவு வந்தது. என்னைப்பற்றிய அறிவிப்பு இல்லாவிட்டாலும் பரவா யில்லை, பெயரே இல்லை. சேர்ந்த ஒருநாள்தான் நான் பள்ளி சென்றிருந்தேன். அப்புறம் என் பெயர் எப்படி இருக்கும்? என்னவோ தெரியவில்லை என் பெற்றோர் ஒன்றுமே சொல்லவில்லை.

கெட்டிக்காரப்பையன் என்றுதான் கூறினர். சமத் துக்கன்னு என்று பாராட்டினர். பள்ளிக்குச் செல்லா மல் விளையாடியது என் அன்னைக்குச் சமர்த்தான காரியமாய்த் தோன்றியிருக்கிறது. அடுத்தவர்கள் வந்து என் தோல்வியைப்பற்றி துக்கம் விசாரித்த போது, படித்தால்தான் பையன் நல்லவனு? ஏன் படிக்காத மேதைகள் பலர் உள்ளனரே என அன்னை கூறுவாள். அன்னை ஒன்றைமட்டும் மறந்துவிட்டார் கள். அந்த படிக்காத ஞானிகள் உயர்ந்த பண்பு உள்ளவர்களாக அல்லவா இருக்கிறுர்கள். எனக்கும்

பண்புக்கும்தான் பத்துமைல் இருக்குமே. இந்த உலகில் படிக்காத முட்டாள்களைவிட படித்த முட்டாள்கள் தான் அதிகம். என் மகன் படிக்காத அறிவாளி என்று என் அன்னை கூறுவாள். படித்துவிட்டு முட்டாள்தனமாய் நடந்து கொள்வது மாபெரும் குற்றம். அதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் நான் படிக்க அனுப்பியும் படிக்காமல் இருந்தேன். படிக்காமல் இருந்து கொண்டு தீயவற்றைச் செய்தேன். எப்படியோ படித்தேன். மூன்று வருடங்கள் படித்து இரண்டாம் வகுப்பு என்ற பட்டத்தை வாங்கினேன்.

இரண்டாம்வகுப்பு வர இத்தனை ஆண்டைக் கழித்த நான், பள்ளி இறுதிவகுப்பை அடைய மொத்தத்தில் பதினெட்டு ஆண்டுகளை எடுத்துக் கொண்டேன். ஆக பள்ளி இறுதிவகுப்பை முடித்துக் கல்லூரியில் நுழையும்போது எனக்கு வயது இருபத்திமூன்று. என்னோடு மிகச்சிறிய பையன்களெல்லாம் படித்தனர். நான் திருமணம் செய்துகொண்டிருப்பேனேயானால் எனக்கு அவ்வளவு உயரப் பையன் இருப்பான், என நான் எண்ணுகிறேன். அவர்களைப் பார்க்கும்போது என்னை அறியாமல் ஒரு ஏக்கம் ஏற்படும். சின்னப் பையனும் புகுமுகவகுப்பு நானும் புகுமுக வகுப்பு. இதை எண்ணிச் சில சமயங்களில் கண்ணீர் கூட வடித்தேன். ஒரு சில நண்பர்கள் எம். ஏ. படிக்கிருயா? என்று கூட கேட்டு இருக்கிருர்கள். நான் ஆமாம் என்பது போல் தலையை ஆட்டி இருக்கிறேன்.

கல்லூரியில் நான் புரிந்த தீயவற்றை சொல்வதற்கு என் ஆத்மா வெட்கப்படுகிறது. வெட்கத்தைப்

பார்த்தால் வேதனை எப்படிக் குறையும். தேங்கி இருக்கும் அசுத்த நீரை வெளியேற்றினால்தானே, அந்த இடத்தை புனிதமானதாக மாற்றமுடியும். ஆக எனது தீய செயல்களை உங்களிடம் சொன்னால்தானே, நான் புனிதனாக மாறமுடியும். நான் சொன்னால்தானே நீங்கள் இனிமேல் தீயவற்றைச் செய்யாமல் இருக்க முடியும். சொல்கிறேன் கேளுங்கள் நான் என்னைப் பற்றிக் கூறவேண்டுமெனில் ஒரு உதாரணத்தை உதவிக்குக் கட்டாயம் இழுத்துத்தான் ஆக வேண்டும்.

உழைப்பிற்கு எருது, நடைக்குச் சிங்கம், வீரத்திற்குப் புலி, கூட்டுறவிற்கு காகம், வாழ்விற்கு மான், ஒழுக்கத்திற்குப் புழு, பழக்கத்திற்கு நாய், தீய செயல் புரிவதற்கு நான் என்றுதான் கூறவேண்டும். கல்லூரி ஆசிரியர்களிடம் எனக்கு வேண்டாதவனைப் பற்றி பொய்ப்புகார் கூறுவது, ஆசிரியருக்கு ஆயில் அடிப்பது, வணக்கம் என்று சொல்லி போலி மதிப்புக் கொடுப்பது, வீட்டிலுள்ள அவரைக்காயை ஆசிரியரின் மனைவிக்கும், மல்லிகை மலரை அவரின் மகளுக்கும் அளிப்பது, போன்ற செயல்களையெல்லாம் செய்தேன். இதற்குத் துணையாக நின்றது என் அப்பாவின் பணம். நான் செய்த பணிவிடைகளையெல்லாம், ஒரு சில ஆசிரியர்கள்தான் ஏற்றுக்கொண்டனர். மதிப்பெண் வாங்கமட்டும் நான் முயற்சி செய்வதே இல்லை. உடலுக்கு உயிர் காவல். உரிமைக்கு உறவு காவல், உலகுக்குத் தெய்வம் காவல், மாணவனுக்கு மதிப்பெண்தான் காவல், என்பதை மறந்தேன். நாய்

போல் திரிந்தேன். ஆசிரியர்தான் நம்பக்கம் இருக்கிருரே, என்ற அகந்தையில் படிக்காமல் இருந்தேன். ஆசிரியர் என்பதற்கு நான் தனி அர்த்தம் வைத்திருந்தேன். அது ஆ+சிறியர் என்பதுதான். அதாவது சிறிய மதிப்பெண்ணை பெரிய மதிப்பெண்ணாக எனக்கு ஆக்கித் தருபவர், என்றுதான் எண்ணியிருந்தேன்.

மாமரத்தில் கல் எறிந்த கதைபோல சில தடவை பழமும், பலதடவை கல்லும் விழுந்தன. கனியைப்பெற முருகனும், விநாயகரும், போட்டியிட்ட கதைதான் எனக்கு இப்பொழுது ஞாபகத்திற்கு வருகிறது. சிவனையும், பார்வதியையும் சுற்றியே, விநாயகர் கனியைப் பெற்றுவிட்டதைப்போல நான் ஆசிரியர்களை மட்டும் வலம்வந்தே மதிப்பெண் என்ற கனியைப் பெற்றுவிடலாம் என மனக்கோட்டை கட்டி இருந்தேன். அந்த மனக்கோட்டையெல்லாம் ஆண்டி கட்டிய கோட்டைபோல, தரை மட்டமாயிற்று. நான் வெற்றிபெற்ற வருடங்களைவிட தோல்வியுற்ற வருடங்கள்தான் அதிகமென, என் மனது கூறுகிறது.

படிப்பில் தோல்வி ஒருபக்கமிருக்கட்டும். மனிதப் பண்பைக் காப்பதில், தோல்விமேல் தோல்வியை நான் அடைந்தேன். எத்தனையோ நல்ல மாணவர்களின் வாழ்க்கையை யெல்லாம் பாழ்படுத்தி உள்ளேன். எனது கோள்சொல்லும் தன்மையால், பல மாணவர்கள் ஆசிரியர்களின் கோபத்துக்கு இலக்காயினர். சில ஆசிரியர்கள் தன் கோபத்தைத் தேர்வுத் தாளில், கோழிமுட்டை வடிவில் காண்பித்து விட்ட

னர். ஆகவே அவர்களுடைய கல்லூரி வாழ்வுக்கு முற்றுப்புள்ளி இடப்பட்டது. ஆகவே அவர்களது எதிர்காலவாழ்வும் இருளாய் மாறியது. எத்தனையோ மாணவர்கள் தந்தையின் இரத்தத்தால் உதயமான காசைக்கொண்டுதான், கல்வி கற்று வந்தனர். அந்த அப்பாவி மாணவர்களின் வாழ்வு அழிபடவும், [illegible] ணம் பொடிபடவும் காரணமாய் இருந்தேன். அவையெல்லாம் தவறு என்பதை இறந்த பிறகுதான் உணர்கின்றேன் நான். இப்போது யாராவது என்னைப்போல் தவறுகள் செய்து கொண்டிருப்பின் தயவுசெய்து திருந்திவிடுங்கள் என [illegible] கேட்டுக்கொள்கிறேன். வாழ்க்கை குறுகியது. ஆகவே உங்கள் எண்ணமும் குறுகியதாக இருக்கக்கூடாது. அது விரிந்து இருக்கட்டும்.

நான் படித்தபோது எப்படி எப்படி ஆடை உடுத்தியிருந்தேன் என்பதை நான் விளக்க ஆரம்பித்தால், நீ என்ன பைத்தியக்காரனாகவா வாழ்ந்தாய்? எனக் கேட்டுவிடுவீர்களோ, எனப் பயப்படுகிறேன். குளிருக்காக மேல்நாட்டான் உடலை இருக்கப் பிடிக்கும் ஆடையை அணிகிறான் என்பதை அறியாமல், அவனைப்போல் நானும் அணிய வேண்டும் என்ற குருட்டுத்தன்மையால் டைட்பேண்ட், டைட்சர்ட் என அணிந்தேன். படிக்காதவன் தவருன செயலைச் செய்தால் மூடநம்பிக்கை உள்ளவன் எனச் சமுதாயம் அழைக்கிறது. படித்தும் தவருன செயலைச் செய்பவனை என்னவென அழைப்பது. இப்

மோசம் செய்தேன். நான் செய்த மோசங்களை எல்லாம் உங்களிடம் சொல்லிவிட்டு, மோட்சம் பெற ஆசைப்படுகிறேன்.

நான் படித்தபோது பல பெண்கள் என்னை விரும்பினர். என்னைப் பெண்கள் விரும்புகின்றனர் என்பதற்காக, அளவற்ற ஆனந்தம் அடைந்தேன். அவையெல்லாம் தீயவை என்பதை இப்போது உணர்கிறேன். பல பெண்கள் விரும்புகின்றனர் என்பதற்காக, மகிழ்ச்சி அடையும் ஒருவன் திருமணம் முடிந்தவுடன் மனைவி வெறுக்கிருளே, என எண்ணி கண்ணீர் விடவேண்டிய சந்தர்பம் ஏற்பட்டே தீரும். பல பெண்களால் விரும்பப்படும் ஆணோ, அல்லது பல ஆண்களால் விரும்பப்படும் பெண்ணோ, ஒழுக்க வாழ்வை நடத்த முடியாது. ஒழுக்கம் போகும்போது எல்லாமே போய்விடும். விருப்பம் என்பது வழுக்கைப் பாறை போன்றது. எவ்வளவு ஜாக்கிரதையாய்ச் சென்ருலும் என்ரே ஒருநாள் வழுக்கிவிட்டே தீரும். வழுக்கிவிழுந்தவன் லேசான காயங்களுடன் தப்பித்து வந்துவிட முடியாது, என்பதை இப்பொழுது நான் உணர்கிறேன். இளம்வயதில் காதல் நினைவோடு ஒரு பெண்ணோ, ஆணோ அதிகம் பேரால் விரும்பப்படுகிருனென்ருல் அது கெட்டதின் அறிகுறிதான். எண்ணெய் தீரும் சமயத்தில் விளக்குப் பிரகாசமாய் எரிந்து, பிறகு அணைந்து இருளில் மூழ்கும். பல்பு பீஸ் ஆவதற்குமுன் அதிக வெளிச்சத்தைக் கொடுத்து, டங்ஸ்டனை அறுத்துக் கொள்ளும். பேனு இங்க் தீரப் போகும் சமயத்தில் எல்லா இங்கையும் கொட்டி

விட்டு, தன்னைக்காலியாக வைத்துக்கொள்ளும். இவை யெல்லாம் இறந்த பிறகுதான் எனக்குத் தெரிந்தது. நீங்கள் இவற்றையெல்லாம் இருக்கும்போதே அறிந்து கொள்ளுங்கள்.

சரி என் கதையை விட்டு எங்கேயோ சென்று விட்டேன். என்னைப் பணமுடன் வாழ்ந்த ஒரு பிணம் என அழைத்துக் கொள்வதில் ஒரு திருப்தி அடை கிறேன். என்னை நாய் என்றோ, கழுதை என்றோ அழைத்துக் கொள்ளக்கூட தகுதியற்றவன். ஏனென் றால் அவைகளிடம் பல நல்ல குணங்கள் இருக்கின் றன. என்னிடம்தான் ஒரு நல்ல குணம்கூடக் கிடையாதே. பிணமாகிய என்மேலும், பல பூக்கள் விழுந்தன. பிணத்தின்மேல் ஈக்கள் அமர்வது இயற்கை. ஆனால் இந்தப் பூக்களை நான் பூவென்று அழைப்பதைவிட, ஈயென்றே அழைக்க விரும்பு கிறேன். ஈக்கள் எதன்மேலும் அமரும். அதேபோல் தான் இந்தப் பூக்களாம் பெண்கள், என்னை விரும்பி னர். பிணத்தின்மேல் பூவைப்போட்டாலும் அந்தப் பூக்கள் மலர்ந்தும், நறுமணத்தை வீசிக்கொண்டும் தானே இருக்கிறது. நேரம் செல்லச்செல்ல பிணத் தின் வாடை மேலோங்கி, பூவின் வாசம் ஒடுக்கப் படுகிறது. அந்தப் பூக்களைத் தூக்கி எறியவேண்டிய நிலை ஏற்பட்டு விடுகிறது. ஆம் பூக்களை, ஆம் என் மேல் மொய்த்த அந்த ஈக்கள்போன்ற பூக்களாம் பெண்களைத், தூக்கித்தான் எறிந்தேன். தேனை உறிஞ்சிவிட்டு தேனீ பறந்து சென்றுவிடுவதுபோல, கற்பை அழித்துவிட்டு காமுகனும் நான் ஓடிவந்து

விட்டேன். ஒருதேனீ பலமலர்களில் தேனை உறுஞ்சுவது போல, நான் பல பெண்களின் கற்பை அழித்தேன்.

நான் அந்தப் பெண்மைத் தெய்வங்களிடமெல்லாம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். வாழ்க்கை குறுகியதுதானே. இன்பத்தை அனுபவிப்போம் என்ற வெறித்தனத்தில் காட்டுத்தீபோல் அலைந்தேன். என் நண்பர்களில் சிலர் அனுபவி ராஜா அனுபவி என்ற காற்றை வீசினர். அதனால் அந்தத் தீ கொழுந்து விட்டு எரிந்தது. என்னுடைய தாக்குதலால், ஒரு பெண்மலர் தன்னைப் பலவந்தமாய் அழித்துக்கொண்டது. வயிற்றுவலி எனக் கடிதத்தை வரைந்து வைத்து விட்டு, வாயிலே மாத்திரையைப் போட்டு விழுங்கி விட்டு, வருகிறேன் குமார் எனச் சைகைக் காட்டி விட்டு, மறைந்துவிட்டது அந்த மலர். அந்த வயிற்று வலி ஏற்பட்டதிற்குக் காரணம், என்னுடைய அத்து மீறிய பிரவேசத்தால், அவள் வயிற்றில் உருவான ஒரு உயிர் ஏற்படுத்திய வலிதான்.

அத்துமீறி என்னிடம் நடந்து கொண்டீர்கள். அது தங்களை அத்தான் என அழைக்கும் நிலைக்கு இழுத்து வந்துவிட்டது. உங்கள் வித்தாலே உருவான கரு இன்று உருவாக மாறிக்கொண்டுள்ளது. அந்த உருவாலே, என் உருவில் ஏகப்பட்ட மாற்றங்கள். ஆகவே என்னைத் தங்களுக்குரியவள் என்று அறிவியுங்கள். ஏனென்றால், எனக்குத் தாங்கள் உரிமையானால்தான், என் வயிற்றில் உள்ள உருவுக்கு நான் உரிமையாக முடியும். அப்படி அதற்கு உரிமையளிக்

கும் போதுதான், என் உயிர் எனக்கு உரிமையாகும். என்ன சொல்லுகிறீர்கள்? எனக் கேட்டாள் அவள். போடி, எங்கேயாவது போ. நான் உன்னைக் காதலித்தேனா? மணக்கிறேன் என்று சொன்னேனா? நீ என் காசுக்கு ஆசைப்பட்டாய்; கற்பை விற்றாய்; அதற்குப் பரிசாய் நான் காசைக் கொடுத்தேன்; இப்போது நீ என் ஆசைநாயகி ஆகவேண்டுமென ஆசைப்படுகிறாயே? உனக்கு ஏதாவது தகுதியுள்ளதா? என்று நான் கேட்டேன். அவள் கண்ணீர் விட்டாள். பிறகு அவள் உயிரையே விட்டாள். இன்றும் இந்த நிகழ்ச்சிகள் என் கண்முன்னே தெரிகின்றன. என்னை அவள் பிறருக்குக் காட்டிக்கொடுக்காமல் ஏன் இறந்தாள்? என்பது எனக்குப் பெரும்புதிராய் இருக்கிறது இறந்த பிறகுதான் புரிந்து கொண்டேன், அவள் பெண் என்பதின் இலக்கணம் என்பதை.

அன்புள்ள இளைஞர்களே, என் பாதையில் யாரும் செல்ல வேண்டாம். பெண் என்பவள் கோயில் போன்றவள். கற்பு என்பது தெய்வம் போன்றது. நான் பல தெய்வங்களையே அழித்துவிட்டேன். தெய்வமில்லாத கோயிலுக்கு என்ன மதிப்பு? சொல்லுங்கள். இப்படி எத்தனையோ கோயில்களில் தெய்வத்தை அழித்தேன். ஒருசில கோயில்களில், தெய்வம் போன பிறகும் மணவிழா நடந்தது. தெய்வம்போன ஒரு கோயிலுக்கு, நானே ஒரு மணமகனைத் தேடிப்பிடித்து கொண்டுவந்து, மணவிழா நடத்தி வைத்தேன். அதை எண்ணி இப்போழுது கண்ணீர் விடுகிறேன். இப்படி செய்த செயல் எப்படிப் பட்டதென்றால், புற்று

ஒன்றில் நானே பாம்பை விட்டுவிட்டு, என் நண்பனை கையை உள்ளே விடடா, எனச்சொன்ன செயலைப் போன்றுதான் உள்ளது. நண்பனுக்காக அவன் கையை விட்டான். நம்பிக்கை அவனின் வாழ்வை அழித்தது. இந்த உலகில் அது மிகக்கொடிய பாவம், என்று என் ஆத்மா அறிவுறுத்துகிறது.

ஒரு தடவை கற்பை இழந்து விட்டால், அந்தப் பெண் எச்சி இலைக்குச் சமமே. அதில் முதலில் உண்டவன் உண்ணலாம். அப்படி உண்டால், அது அவனைப் பொறுத்தமட்டும் நல்ல இலை. அடுத்தவனுக்கு அது எச்சிலைதான். ஆம் நான் ஒரு நண்பனை எச்சி இலையில் உண்ணச் சொன்னேன். நான் சொன்னதால் அது நல்ல இலையென அவனும் நம்பினான். அதற்காக அவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். நான் செய்த தவற்றை, நீங்கள் யாரும் செய்துவிட வேண்டாம். அப்படி தவறு தாங்கள் செய்தால், நீங்கள் ஒரு பெரிய கொலையாளியாய்த்தான் கருதப்படுவீர்கள். சாகும்போது புழுத்துத்தான் சாவீர்கள் என எச்சரிக்கிறேன்.

பெரிய கோயில்களிலே தெய்வம் உள்ளதா? இல்லையா? என்பதை நம் கண்ணாலே பார்த்துவிட முடியும். ஆனால் இந்தப் பெண்மைக் கோயிலில் மட்டும் தெய்வம் உள்ளதா? அழிக்கப்பட்டு விட்டதா என்பதை அந்தக் கோயில்தான் அறியும். தெய்வம் அழிந்து விட்டதே, இனி என்னைக் கும்பிடவேண்டாம், என்று மற்ற வாலிபர்களுக்கு அறிவித்துவிட்டு தன்னையே

அழித்துக்கொள்ளும் பெண்கள் ஏராளம். ஆனால் ஒரு சில கோயில்கள் தெய்வம் அழிந்துவிட்டது என்று சொன்னால் பழிக்குமே, உலகம் பகைக்குமே, தூற்றுமே எனப் பயந்துகொண்டு வெளியே யாருக்கும் சொல்லாமல் மணவிழா நடத்திக் கொள்கின்றனர். நான் இதைக்கண்டு கோபிக்கவில்லை. ஏனென்றால் பெண்மைக் கோயிலிலுள்ள தெய்வத்தை அழித்தது, ஆணினத்தைச் சேர்ந்த ஒருவன்தானே. அதனால் அந்த தண்டனையை அந்த இனத்தைச்சேர்ந்த மற்றொருவன் அனுபவிக்கட்டுமே, எனத் துணிந்து அவர்கள் மணந்து கொண்டால் அது தவறு?. அல்லவே அல்ல.

ஒருசில பெண்கள் உணர்ச்சியால் தெய்வத்தை அழித்துக் கொள்கின்றனர். அழிந்தபிறகு முதல் மனைவியை இழந்த மனிதரைத்தான், மணந்துகொள்வேன் என்று அறிவிக்கின்றனர். அது அவர்களின் ஆத்மதிருப்திக்காக. நாம் ஒன்றும் கற்புள்ள ஒரு வாலிபனின் கற்பை அழிக்கவில்லை. முதல் மனைவியோடு வாழ்ந்தவனுடன்தானே வாழப் போகிறோம். மரத்திலேயே மலர்ந்துள்ள மலரைப் பிடுங்கி பிணத்தின்மேல் போடுவது பாவம். ஆனால் தரையில் இருக்கும் மலரைத் தொடுத்து பிணத்தின்மேல் போடுவது பாவமல்ல. ஏனென்றால் தரையிலேயே அழியப் போகும் மலரை எடுத்து பிணத்தின்மேல் போட்டால் பிணம் சிறிது மணமும் பெறுகிறது. மொத்தத்தில் மலர் என்பது எங்கிருந்தாலும் அழியக்கூடியதுதானே. அங்கேயே அழியட்டும் என முடிவு எடுத்து விடுகின்றனர்.

கல்லூரி வாழ்விலே ஆணும் பெண்ணும் பழகு வதைப்பற்றி நான் குறை கூறவில்லை. ஆனால் உள்ளே கற்பு என்ற ஒரு தெய்வம் இருக்கிறது. அது அழியாத வகையில் பழகி வருவோம், என ஒவ்வொருவரும் எண்ணிப் பழகவேண்டும். ஒவ்வொரு ஆடவனும் எனக்கென ஒருத்தி எங்கோ இருப்பாள். இங்கு ஏன் அதற்கு முயற்சி எடுக்க வேண்டும்? என எண்ண வேண்டும். பெண்ணும், எனக்கென ஒருவன் எங்கோ இருப்பான், என்ற நினைவில் கடமையை ஆற்றிவர வேண்டும். இந்த நிலையில் பழக்கம் தொடர்ந்தால், தெய்வம் இல்லாத கோயில்களே இருக்காது. என்னால்தான் அப்படி வாழமுடியாமல் போய்விட்டது. நீங்களாவது நன்முறையில் வாழுங்கள். ஊதுகிற சங்கு ஊதட்டும் என்று சும்மா இருந்துவிடாதீர்கள். இது தேர்வு எழுதும்போது ஊதுகின்ற, சங்கின் ஓசையாகக் கருதிக்கொள்ளுங்கள்.

கற்பு என்பது எரியும் விளக்கைப் போன்றது. அன்பு, பழக்கம் இவை இரண்டும் எண்ணெய்யும், திரியும், போன்றது. கற்பு என்பது விளக்குச்சட்டி போன்றது. இருவரின் பழக்கம் என்பது எண்ணெய்யும், திரியும் சேர்ந்து எரிவதுபோல. அதனால் கற்பு என்ற விளக்குச்சட்டி உடையாவண்ணம் எரியுங்கள். கற்புமட்டும் அழியாத முறையில் பழகுங்கள் என்கிறேன்.

மேலே நான் செய்த தவறுகளுக்கெல்லாம், பல காரணங்கள் உண்டு. ஏன் நான் மிருகமாக மாறினேன்? என்பதைக் கூறித்தான் ஆக வேண்டும். ஒரு

கையால் சத்தத்தை எழுப்ப முடியுமா? நான் மனித நிலையில் இருந்து வழுக்கி விழுந்ததற்குக் காரணம், என்னோடு படித்தபெண்களின் போக்குத்தான். அதனால் நான் மனிதநிலையில் இருந்து தவறினேன். பிறகு என்னோடு தொடர்ந்த தீச்செயல்களால், மிருக நிலையை அடைந்தேன். நான் படித்த காலத்தில் பெண்கள் ஆபாசமாய் உடை அணிந்து வந்தனர். அவர்கள் புத்தகத்தில் உள்ள கருத்துக்களை அறிந்து கொள்ள வந்தனரா? அல்லது தன்னிடமுள்ள உடை வகைகளையும் தன் அங்க அழகுகளையும் அறிமுகப் படுத்த வந்தனரா? என்பதை இப்பொழுது நான் எண்ணிப் பார்க்கிறேன். முழுக்க தன் உடலை மறைத்து, முத்துப்போல் தன் நெற்றியில் குங்குமமிட்டு, பெண்மையின் தெய்வமாய், பணிவாய், தெய்வமகளாய், நிலமகளைப் பார்த்தவாறு வந்த பெண்ணை, சாக்குமூட்டை என நான் கிண்டல் செய்தது, என் காதில் இன்றும் ஒலிக்கின்றது. என்னைப் பார்த்துச் சிரித்தவளையும், ஏமாந்தால் என்மேல் இடிப்பவளையும், அரட்டை அடிப்பதில் அரசியாய் விளங்கியவளையும், அங்கத்தைக் காட்டும் அரைகுறை உடை அணிந்த மங்கையையும், கண்ணகியின் வாரிசு இவள் தான், என்று நான் பாராட்டிய சொற்கள் என் காதில் ஒலிக்கின்றன. நான் நாகப்பாம்பு எடுக்கும் படத்தைத் தாஜ்மஹால் எனவும், வைரக்கல்லை வெங்கக்கல் எனவும் நினைத்து வாழ்க்கையை நடத்தி வந்துள்ளேனே, என எண்ணிக் கண்ணீர் விடுகிறேன். நான் சாக்கு மூட்டை என வர்ணித்த பெண்கள்தான், சந்தன மரமாய் வாழ்ந்துள்ளனர் என்பதை, நான் இறந்த

பிறகு அறிந்தபோது, அளவற்ற ஆனந்தம் அடைந்தேன்.

நான் கெட்டதற்குக் காரணம் என்னோடு படித்த பெண்கள் அரைகுறையாய் ஆடை அணிந்துவந்தது தான். சிறிது நீர் உள்ள குளத்தில், கல்லை எறிந்தால் நீர் கலங்கிவிடுவதுபோல சிறுமைக்குணங்கள் நிறைந்த உள்ளத்திற்கு அந்தப் பெண்களின் கண்ணெறி, கலக்கத்தை ஏற்படுத்தின. எப்படியோ வழுக்கி விழுந்தேன். அதற்குமேல் செய்த தவற்றைத்தானே செய்கிறோம், என்ற நினைவில் அந்த தீச்செயல்களைத் தொடர்ந்து செய்தே வந்தேன்.

எப்பொழுது புனிதம் என்ற ஒன்றை இழந்தேனே, அந்த நாழிகையிலேயே நான் இனிமேல் புனிதனாய் இருக்க முடியாது என் நிலைக்கு வந்தேன். புனிதனாய் இல்லாமல் போனால் போகிறது, இனிமேலாவது நல்ல மனிதனாக வாழ்வோம், என எண்ணி நடைபோட்டுக் கொண்டிருந்தால், சில நேரங்களில் சந்தர்ப்பத்தால் அந்த உறுதி தகர்க்கப்பட்டு விடுகிறது. என்னுடைய ஒரே வேண்டுகோள், இளம்பெண்களே ஆண்கள் என்பவர்கள், உம் இனத்தின் வயிற்றில் வளர்ந்த ஒரு அன்பு இனம். அவர்களது உள்ளத்தைக் கெடுக்கும் அளவில் ஆடை அணியாதீர்கள்.

பெண்ணுக்குக் கற்பு எப்படியோ, ஆணுக்கு உள்ளம் அப்படி. உள்ளம் அழியும்போது வாழ்வே அழிந்து

விடுகிறது. இது பாவமல்லவா? எனக்குத் தகுதியில்லை அறிவுரை கூற. ஆனாலும் கூறுகிறேன். ஆடைக்குறைப்புச் செய்ய வேண்டாம். அதை அலங்காரம் என்றும் எண்ணவேண்டாம். ஆடம்பரப் பெண்ணைத்தான் ஆடவர்கள் விரும்புவார்கள், என்ற தப்பெண்ணத்தை விட்டுவிடுங்கள். நல்லபெண்ணை, குணமுள்ளவளை, எளிமையின் சின்னத்தை, அவர்கள் பெண்ணாகக் கருதுவதைவிட, தெய்வமாக நினைப்பார்கள். பெருமதிப்பால் ஏற்படும் அன்பு நிலையானது. அந்த அன்பின் வழியிலே திருமணம் நடந்தால் அது அழியாத அன்பையுடைய, இல்லற வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கும். ஆடம்பரத்தால் ஏற்படும் அன்பின் மூலமாக, நல்ல இல்லறத்தைப் பெற்றுவிடலாம் என்பது, விமானத்தின் மூலமே சந்திரனை அடைந்து விடலாம், என்று எண்ணுவது போன்றது.

பெண்களே நீங்கள் பெண்களாக நடந்து கொள்ளுங்கள். நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய பழமைக் கருத்துக்கள், ஏராளமாய் உள்ளன. புதுமைப் புரட்சி என்று புறம்பான காரியங்களை நீங்கள் செய்தால், உங்கள் வாழ்வில் வறட்சிதான் மிஞ்சும். பின்பு அந்த வறட்சி உங்கள் வாழ்வில் புரட்சியை ஏற்படுத்தும். பிறகு இல்லம் போர்க்களமாயும், கணவனும், மனைவியும் பகைவர்களாயும், குழந்தைகள் படைகளாயும் மாறவேண்டிய நிலை ஏற்பட்டுவிடும். திருந்தி நடப்பீர்கள், என்று என் ஆத்மா எண்ணுகிறது. மற்றபடி எல்லாம் உங்கள் விருப்பம்.

இத்தனை கெட்ட செயல்களைச் செய்துகொண்டு நல்ல செயலான படிப்பை என்றால் நல்லமுறையில் செய்யமுடியுமா? நான் படிப்பதாக வேடம் போட்டேன். படையே இல்லாமல் போர்புரியச் செல்லும் அரசன் போல, நான் படிக்காமலேயே தேர்வுக்களம் நுழைந்தேன். பலதடவை எனக்குத் தோல்விதான் பரிசாய்க் கிடைத்தது. இத்தனை தோல்விகள் நேர்ந்தாலும், என்னில் ஒரு மாற்றமும் ஏற்படவில்லை. ஏனென்றால் நான் மனிதனே அல்ல. ஒரு மிருகம். சிந்திப்பவனுக்குத் தோல்வி, அவன் முன்னேற உதவும் படிக்கட்டாய் விளங்கும். சிந்திக்காதவனுக்கு என்னமோ ஒரு கெட்டசகுனம் என்றுதான் தோன்றும். ஆனால் என் பெற்றோர் என்னைப் படிக்க வைத்துக்கொண்டே இருந்தனர். புகுமுக வகுப்பில் நான் வெற்றி பெறவே முடியவில்லை.

பிறகு அலுவல் தேடும் வேட்டையில் ஈடுபட்டேன். என் அப்பாவின் முயற்சியாலும், அவருக்குத் தெரிந்த ஆபீசரின் சிபாரிசாலும், ஒரு குமாஸ்தா வேலை கிடைத்தது எனக்கு. அரசாங்க அலுவலகத்தில் நான் பணிபுரிகிறேன் என்பதால், அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஒரே மகிழ்ச்சி. அரைக்காசு சம்பளமானாலும், அரசாங்கக்காசு என்று அன்னை பெருமிதப்பட்டுக்கொண்டார்கள். காலதேவன் சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டிருந்தான். இரண்டு, மூன்று மாதங்கள் சுழன்று விட்டது. எனது சம்பளத்தில் ஒரு காசு கூட வீட்டிற்குப் போய்ச்சேரவில்லை. உண்டதும், உறங்கியதும், என் சொந்த வீட்டில்தான். அப்படி

இருக்கும்பொழுது என்னடா செலவு செய்தாய்? என என்னைக் கேட்கத்தோன்றும். அவற்றையெல்லாம் பின்னால் சொல்கிறேன். சொல்கிறேன் எனச் சொல்லி விட்டு, சொல்லாமல் போய்விடுவேன் என எண்ண வேண்டாம்.

ஒரு நாள் என் அன்னை என்னைக் கூப்பிட்டார்கள். என்ன அம்மா என்று பயந்துகொண்டே அவளின் பக்கத்தில் சென்றேன். எங்கே நான் செய்த தவறு கள் அனைத்தும் அன்னைக்குத் தெரிந்துவிட்டதோ, என்று எண்ணியபோது, என் உடலெல்லாம் நடுங்கி யது. முகத்தில் திடீர் மாற்றங்கள். வியர்வை துளிர்த் தது. நாக்கு நன்முறையில் பிரள மறுத்தது. அம்மா, என்று நடுக்கத்துடன் அவளருகில் சென்றேன்.

டே குமார், உனக்கு வயது ஆகிவிட்டது. நீதான் உன்னையே உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும். உனக்கு விரைவில் திருமணம் செய்துவைக்க வேண் டும் என எண்ணியுள்ளேன். உன் விருப்பம் என் னடா? என அன்னை கேட்டார்கள். நம்மை விட் டால் போதும், என எண்ணிக்கொண்டு, எல்லாம் உங்கள் விருப்பம். உங்கள் விருப்பப்படி நான் நடக்கத்தயார், எனச் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

இருண்டவானில் ஏற்பட்ட மின்னல்போல, என் இருண்ட இதயத்தில் ஒரு எண்ணம் தோன்றியது. நான் செய்த தவறுகள்தானே என் அன்னையின் பக்கத்தில் செல்லவே பயத்தை உண்டாக்குகிறது. ஆனால் அவளோ தலைக்குமேல் வளர்ந்துவிட்

என்னை, கண்டிக்கக்கூடப் பயப்படுகிறார்கள். இளம் வயதிலே என்னைக் கண்டிக்காததற்குக் காரணம், நான் அவளின் அன்புக்குழந்தை என்பதால்தான். இனிமேல் நல்லவனாகவே வாழ்வோம், என எண்ணிக் கொண்டு தெருவிலே நடைபோட்டுக் கொண்டிருந்தேன். அலைபாய்ந்த எனது மனத்தில், அமைதியை ஏற்படுத்த விரும்பினேன். அங்கும் இங்குமாய் அலைந்தேன். பூங்காவுக்குச் சென்றேன். அங்கும் அமைதி இல்லை. சினிமாக் கொட்டகையை நோக்கிப் புறப்பட்டேன். அங்கு ஓடிக்கொண்டிருந்த படத்தைக் கண்ட போது, சிறிது அமைதி அடைந்திருந்த மனத்தில், மறுபடியும் அலை அடிக்கத் தொடங்கியது. இப்படிப் பட்ட படங்களைப் பார்ப்பதால், இன்னும் ஏராளமான குமார்கள் உருவாவார்கள், என எண்ணிக் கொண்டேன்.

அமைதியை ஏற்படுத்துமென அங்கே சென்றால், அங்கு நாகரீகம் என்று கூறிக்கொண்டு, நடந்த அட்டகாச நிகழ்ச்சிகள் என்னைத் துன்பப்படுத்தின. அசிங்கமாக கதாநாயகனும், கதாநாயகியும் ஆடிய ஆட்டங்கள், என் உள்ளத்திலேயே விரசத்தை ஏற்படுத்திவிட்டன. இன்றைய சினிமா உலகம் செல்லும் பாதையை எண்ணி வருந்தினேன். அந்தக் கதாநாயகனைவிட என்னுடைய குணநலன்கள் எவ்வளவோ நல்லதாய்ப் பட்டது. எனக்கே இப்படி விரசங்களை உண்டாக்குகிறதென்றால் இளம் வயதுப் பெண்களுக்கும், ஆண்களுக்கும் எப்படிப்பட்ட எண்ணத்தையெல்லாம் ஊட்டும் என்று எண்ணிய

போது எனக்கே வருத்தமாய் இருந்தது. நான் அலை பாய்ந்த மனத்துடனேயே சினிமாவை விட்டு வெளியே வந்தேன்.

ரோட்டில் நடக்க ஆரம்பித்தேன். தன்னை அலங்கரித்துக்கொண்ட பெண்கள் பலர் அங்கும் இங்கும் நடைபோட்டுக் கொண்டிருந்தனர். அப்படி ஐந்தாறு, பெண்கள் நடைபோட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்துக்கொண்டே வந்தேன். ஒரு பெண் என்னை நெருங்கி வந்தாள். நான் பார்க்காதவனைப்போல் தொடர்ந்து நடந்துகொண்டே இருந்தேன். இந்தாங்க என்று கூப்பிட்டாள். கொடு எனக் கையை நீட்டினேன். இங்கே வாருங்கள் என்றுள். மகுடியின் ஓசையிலே மயங்கிய நாகம் போல, நான் அவள் காட்டிய பாதையில் சென்றேன். மகுடியிடம் மயங்குகிறது நாகம். விலைமாதிடம் மயங்குகிறுன் மனிதன், என்ற எண்ணம்தான் அப்போது எனக்குத் தோன்றிற்று. ஏன் அழைத்தாய்? என நான் கேட்டபோது, அவள் அறிவித்த அறிவிப்பைக் கேட்டு அதிர்ச்சியுற்றேன். அந்தக் குரலோசை யாருடையது என அப்போது நான் அறிந்து கொண்டேன்.

நான்தான் தவருய் என் வாழ்க்கைச் சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டிருக்கிறேன். நீ ஏன் மீனு இந்தத் தொழிலை மேற்கொண்டாய்? நீ இல்லம் என்ற கோயிலில் நடைபோடவேண்டிய தெய்வம். ஏன் இந்த ரோட்டில் நடைபோடுகிருய்? எனக் கேட்டேன். நீங்கள் யார்? என என்னைக் கேட்டாள்.

என்னைத் தெரியவில்லையா? நானும் நீயும் பள்ளியில் பயின்றதை மறந்துவிட்டாயா? ஒழுக்கத்திலும் படிப்பிலும் முதல்வளாய் விளங்கியவள் நீ. நான் எல்லாவற்றிலும் கடைசியில் இருப்பேன். இன்னும் தெரியவில்லையா? என்னை. உன்னை ஒரு நாள் வெறித்தனமாக இழுத்தானே, குமார் என்ற ஒருவன். அவன் தான் நான் என்று சொல்லிக் கண்ணீர் விட்டேன்.

குமார் நீங்களா? என்று அவள் கேட்டாள். ஆம் அந்தக் குமார் தான், என்று நான் கத்தினேன். நான் பள்ளியில் தவறாக நடக்க முயன்றபோது எவ்வளவு அழகாய் என்னுடைய தவற்றைத்திருத்தினாய். மறந்து விட்டாயா மீனா? நான் சகதியில் இறங்கியபொழுது நீ மீனாக இருந்து என்னைப் புனிதப்படுத்தினாய். இப்பொழுது நீ ஏன் சகதியில் இறங்கிவிட்டாய்? என்று கேட்டேன். அவள் அழுதாள். ஏன் அழுகிறாய் எனக் கேட்டேன்?

குமார் நான் அழாமல் என்ன செய்ய? பள்ளி இறுதிவகுப்பில் முதல் மதிப்பெண்ணைப் பெற்றேன். என் குடும்பமோ ஏழைக் குடும்பம். வேலைதேடி அலைந்தேன். அலைச்சல்தான் மிச்சம். எங்கும் வேலையே கிடைக்கவில்லை. அதன் இடையே தந்தை இறந்தார். காலச்சக்கரம் சுழன்றது. தந்தை சேர்த்த பொருளெல்லாம் அழிந்தது. அவர் இறந்த துயரத்தில் அன்னை படுக்கையில் படுத்தாள். பூனை அடுப்பில் படுத்தது. வறுமைப்பேய் அன்னையையும் அழித்து விட்டது. மறுபடியும் வேலைதேடும் படலத்தை ஆரம்

பித்தேன். சென்ற பல இடங்களில் என்னை சிலர் பரிதாபமாகப் பார்த்தார்கள். பலர் கழுகுக்கண்ணேடும், காமக்கருத்தோடும் பார்த்தார்கள். இன்று காலைவரை நான் வேலைக்காக அலைந்தேன். வேலையே கிடைக்கவில்லை. பிறகு ஒரு சத்திரத்தில் வெய்யிலுக்காக ஒதுங்கினேன். பசி என்னை வாட்டிற்று. அந்தச் சத்திரத்தில் சிலபெண்கள் தன்பசியைப்போக்கிக்கொள்வதற்காக, காமப்பசிகொண்ட ஆடவனின் பசியைத்தீர்த்து தன் பசியைப் போக்கிக்கொள்வதைப் பார்த்தேன். நீண்ட சிந்தனைக்குப் பிறகு தற்கொலை செய்து கொள்ளலாமா? என எண்ணினேன். ஏனே என் உள்ளம் தடுத்தது. பிறகு நான் இப்பணியை மேற்கொள்ளத் துணிந்தேன். துணிந்தபிறகு என்னை நோக்கி வருவார் யாருமே இல்லை. பிறகு என்னையே தைரியப் படுத்திக்கொண்டு உங்களைக் கூப்பிட்டேன். நான் நீங்கள்தான் என்பதை அறியவில்லை. என்னை மன்னிக்கவும் எனக் கூறினள்.

என்னிடம் ஏன் மீண்டு மன்னிப்புக் கேட்கிருய்? நான் அயோக்கியன் என்றேன். அப்படியெல்லாம் சொல்லாதே குமார். மனிதனைத் தவற்றில் செலுத்துவது சூழ்நிலைதானே என்ருள். நீ ஒன்றும் தவறவில்லையே என்றேன் நான். தவறவில்லை குமார். சற்றுமுன் தான் தவற நினைத்தேன். இப்பொழுது வந்த நீ மட்டும் குமாராய் இல்லாமல் இருந்திருந்தால், இந்நேரம் இழக்கக்கூடாததை இழந்திருப்பேன் எனக் கூறுளுள்.

என் அன்னையைத்தான் உனக்கு நன்முறையில் தெரியுமே. என் வீட்டுக்கு வா. என் வீட்டிலும்

தங்கை இல்லை. அத்தோடு அன்னைக்கு நல்லகுழந்தை என்று சொல்லிக்கொள்ள, ஒருவர்கூட இல்லை. அவர்களால் பெறப்படாத நீயாவது நல்லமகள் என்று பெயர்எடு என்றுக் கூறிக் கூட்டிச்சென்றேன். அன்னையிடம் அனைத்தையும் கூறினேன். இவள் இனி என் மகள் என்று ஏற்றுக் கொண்டார்கள். இப்படிப்பட்ட நல்ல அன்னையின் தருதலைக் குழந்தையாய் நான் உள்ளேன், என எண்ணியபோது எனக்குத் துன்பமாய்

நான் என் வாழ்நாளில் மீனுவை கற்பழிக்காமல் தங்கையாய் ஏற்று, என் வீட்டுக்குக் கூட்டி வந்தது ஒரு நல்ல காரியம். இன்றும் அந்த செயல், தீப்பட்ட உடம்பில்பட்ட எண்ணெய்த் துளியாய் எண்ணுகிறேன். அவளிடம் அன்று தவருய் நடக்காததற்குக் காரணம், அவள் பள்ளியில் என்னோடு படித்தபோது நடந்துகொண்ட விதத்தால்தான். நான் தவறு செய்துவிட்டுப் பயந்தேன். பதறித் துடித்தேன். என் அப்பாவிடம் சொல்லிவிடாதே என்று கெஞ்சினேன். உடனே அவள் உங்கள் அப்பாவிடம் சொல்லமாட்டேன் என உறுதி அளித்தாள். இனிமேல் என்னிடம் இப்படித் தவருய் நடந்து கொள்ளாதே, என என்னையும் கேட்டாள். சத்தியமாகஉன்னிடம் தவருய்நடக்கமாட்டேன் எனச் சொல்லிவிட்டு, இன்றுமுதல் நீ எனது தங்கை என்று சொன்னேன். அந்த சத்தியத்தின் நினைவுதான் மீனுவின் கற்பையும், இன்னொரு மலரை அழித்த கொடுமையான பெயரை அடையும் நிலையையும், எனக்கு ஏற்படாமல் தடுத்தது. இந்த எண்ண அலை

களின் மோதலின் இடையே, வீட்டில் இங்கும் அங்கு மாய் நடந்து கொண்டிருந்தேன்.

மீனுவும் என் அன்னேயும் பேசிக்கொண்டே இருந் தார்கள். மீனுவை தங்கை என அழைத்தபோது எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை எண்ணிப்பார்க் கிறேன். நல்லவனுய் வாழ்வதிலும், இவ்வளவு இன்பம் உள்ளதா? என எண்ணியபோது ஆச்சரியமாய் இருந் தது. நல்லவனுய் வாழ்வோம் இனி என உறுதி எடுத்துக்கொண்டு, படுக்கையில் போய் படுத்தேன்.

நான் முன்னே செய்த காமக்களியாட்டங்களும், பின் அன்று இரவு சினிமாவில் கண்ட காதல் விளே யாட்டுக்களும், என்னேத் தட்டி எழுப்பின. உணர்ச்சி யின் பிம்பமானேன். மெதுவாக எழுந்து கதவைத் திறந்துகொண்டு தெருவில் நடக்கலானேன்.

எங்கே மோசமான ஆடவனுக்கு விரசமான இன் பத்தை அளிக்கும் வேசிகளின் நடமாட்டம் தென் படுமோ, அங்கே சென்றேன். அந்தக் கூட்டத்தினி டையே இருந்து ஒரு இளம் குமரியை அழைத்தேன். வந்தவுடன் என்ன தம்பி என்று வினவினுள்? எனக்கு ஆச்சரியமால் இருந்தது. வந்தவனெல்லாம் உனக்கு மாமாதானே? ஏது உனக்குத் தம்பி? இந்த உலகில் என்றேன். சத்தம்போடாதே என்று சொல்லி ஒரு சந்துக்கு அழைத்துச் சென்ருன். அமரச் சொன்னுள். அமர்ந்தேன்.

தம்பீ, என்று கண்ணீர் விட்டுக்கொண்டு தழு தழுத்த குரலில் கூப்பிட்டாள். ஏன் அழுகிறாள் வேசி? என நினைத்துக்கொண்டு, என்ன என்றேன். உனக்கு வயது என்ன? என்றாள். இருபத்தைந்து என்றேன். மணம் முடிந்துவிட்டதா? என்றாள். இல்லை என்றேன். தம்பி நீ உணர்ச்சி வயப்படவே கூடாது. அமைதி யாய் வீட்டில் எரிய வேண்டிய விளக்கு நீ. மற்றவர் களுக்கு ஒளி கொடுக்கவேண்டிய அகல்விளக்கு. நீ சூறாவளிக் காற்றிடையே சுற்றுகிறாய். இங்கே நீ அலைந்தால் அழிந்து விடுவாய். நீயும் அழிந்து உன்னை நம்பி இருக்கும் பெற்றோரின் வாழ்வையும் அழித்து விடுவாய். தம்பி என்னை வேசி என்றுமட்டும் நினைத்துக் கொண்டிருக்கிறாய். நான் ஒரு பையனுக்குத் தாய், என்பதை நீ அறிந்திருக்கமாட்டாய். நான் நோயை யுடையவள். நீ என்னோடு இன்பம் காணத் துடிப் பாயேயானால், உன்னையும் அந்தநோய் பற்றிக்கொள் ளும். பின் வாழ்விலே உள்ள பற்றுக்கள் அனைத்தை யுமே, அழித்துவிடும். சிறிது நேரம் அமைதியாய் இருந்தாள்.

பிறகு புரிகிறதா தம்பி? என உரக்கக் கேட்டாள். புரிகிறது என்றேன் நான். முக்கால்வாசி வேசிகள் நோய்களின் இருப்பிடமாய்த்தான் திகழ்வார்கள். இளம் வாலிபர்களைக் கெடுக்க அவர்கள் ஆரம்பித்து விட்டால், இந்த நாடே கெட்டுக்குட்டிச்சுவராகிவிடும். நான் வேசியானதற்குக் காரணம், இந்த சமுதாயம் தான் என்றாள். சமுதாயம் என்ன செய்தது? என நான் கேட்டேன். வேலை என அலைந்தால் கொடுக்க

மறுக்கிறது. ஆனால் இந்த அற்ப உடம்புக்காக எங்களுக்கு காசைத் தூக்கி எறியும் கனவான்கள் பலரைக் கொண்டுள்ளது. தம்பி, நீ இனிமேல் வேசியை மட்டும் நாடிவிடக்கூடாது என என்னிடம் சொன்னாள்.

சரி, இப்படியே வந்தவர்க்கெல்லாம் அறிவுரை வழங்கி நீ அனுப்பிவிட்டாயானால், உன் வாழ்க்கைச் சக்கரம் எப்படிச் சுழலும்? என நான் கேட்டேன். நீ ஒன்றும் தெரியாதவனாய் இருக்கிறாயே. எங்களை நாடி பல மணம்முடிந்த கனவான்கள் வருவார்கள். வயதான கிழவர்கள் வருவார்கள். கெட்டுத்தொலைந்து அடுத்து சிறைக்குச் செல்லத் தயாராயிருக்கும் குற்றவாளிக்குரங்குகள் வருவார்கள். நீதியைக்காக்கிறோம், நேர்மையாய் ஆள்கிறோம் என மேடையில் பேசிவிட்டு கைதட்டு வாங்கிக்கொண்டு வரும் சில பேச்சாளிகள், எங்களை கைதட்டிக் கூப்பிட்டு காசைக்கொடுத்து காமப் பசியைத் தீர்த்துக்கொண்டு செல்கின்றனர். கெட்டவன் கெடட்டும். கெடத் துடிப்பவன் திருந்தட்டும். ...ான் என் கொள்கை. புரிகிறதா தம்பி? என்றாள்.

மணம்முடிந்த கனவான்களுக்கு நீ ஏன் மஞ்சத்தில் தஞ்சம் அளிக்கிறாய்? என நான் கேட்டேன். அது நான் ஆழ்ந்து யோசித்த பிறகு ஏற்றுக்கொண்ட முடிவு. கிளி போன்ற மனைவி வீட்டில் இருக்க, இங்கே கழுகு போன்ற எங்களை ஒருவன் நாடி வருகிறானென்றால், அவனை மனிதனாக என்னால் மதிக்க முடியவில்லை. அப்படிப்பட்டவரையெல்லாம் மிருகமாகத்தான் நான் கருதுகிறேன். அவன் காசைக் கொடுத்து பசியைத்

தனித்துக்கொண்டு வீட்டுக்குப் புறப்படும்போது நான் சிலவற்றைக் கூறுவேன். நோயையுடையவள் நான். அதை உங்கள் மனைவிக்கும் பரப்பி விடாதீர்கள். உங்கள் டாக்டரிடம் சென்று நோயை விரட்டிவிட்ட பிறகு, வீட்டில் இல்லறம் நடத்துங்கள் என அறிவுரை கூறுவேன். அந்த நோயின் கொடுமையும், மருத்து வரின் அறிவுரையும் அவனை மனிதனாக்கும். பிறகு அவன் மனைவியையே தெய்வம் எனக் கருதுவான். வேசியை மிருகமெனக் கருதுவான். அதனால் அவன் வாழ்வு சீர்படும். அது நல்லதுதானே என மூச்சுவிடா மல் பேசிமுடித்தாள் வேசி.

நீ நத்தை என்ற சமுதாயத்தினுள் உள்ள முத்து என்றேன். இல்லை முத்தாய் இருந்தவளை நத்தையி னுள் செல் என்று அனுப்பியதே உங்கள் சமுதாயம் தான் என்றாள் வேசி. அப்படியா என நான் சொன் னேன்.

இங்கும் பல முத்துக்கள் இருக்கின்றன, என்பதை பழகியபிறகு அறிந்துகொண்டேன். ஆனாலும் இந்த முத்துக்களை பதிக்க முடியாது. காலால் மிதிபட்ட நறுமண மலர்கள் இவை. ஆகவே இவைகளை தலை யில் வைத்துக்கொள்ள முடியாத மலராய் ஆக்கியது உங்கள் சமுதாயந்தான் என்றாள்.

ஏன் தரையிலே விழுந்தீர்கள்? அதனால்தானே காலில் மிதிப்பட்டீர்கள் என்றேன். மலரென்றால் சில காலம் வரைதானே மரத்தில் இருக்கும். அதேபோல் பருவமானதுடன், பறிக்கப்பட்டோம். இங்கே பல

தரப்பட்ட மலர்கள். வறுமையால் தூக்கி எறியப்பட்ட மலர்களும் உண்டு. மணமுடித்த கணவனால், நீ வேண்டாம் போ என்று துரத்தப்பட்ட மலர்களும் உண்டு. வஞ்சக வாலிபர்களால் வஞ்சிக்கப்பட்ட பல வஞ்சிக் கொடிகளும் உண்டு. வருகின்ற வரனெல்லாம் வரதட்சணை போதாது எனச்சொல்லி மணக்க மறுத்த மலர்களில் சிலவும், கட்டுண்டோம் இனிப் பிரியோம், எனக் கடற்கரையில் பேசிவிட்டு கற்பையும் அழித்து விட்டு வயிற்றில் கருவானவுடனே பறந்துவிட்ட பருந்துக்களின் கொத்துக்கு இரையான கொஞ்சும் குமரிகள் பலரும் இங்கு உண்டு. பொதுவாக இது அபலைகள் வாழும் இடம். நாங்கள் நடத்தும் தொழில் பிறரைக் கெடுப்பதற்காக அல்ல. எங்கள் பசிக்கு உணவு கொடுப்பதற்காக என்றாள் வேசி. நான் அவளையே பார்த்துக்கொண்டு இருந்தேன்.

என்னடா தம்பி நீ சொல்லுகிறாய்? என்றாள். நல்லதுதான் சொல்லுகிறாய் அக்கா என்றேன் நான். தம்பி எனக்காக ஒன்று செய்வாயா? என்றாள். செய்கிறேன் என்றேன். வேசியை நாடேன் எனச் சத்தியம் செய் என்றாள். நான் வேசியை நாடேன் எனச் சொன்னேன். சரி போய் வா எனக் கூறினாள்.

இப்பொழுது அழுக்கேறிய பித்தளை விளக்கை புளிபோட்டுத் தேய்த்தால் சுடர்விட்டு மின்னுவது போல நான் அழகாகப் பட்டேன் என் கண்ணிற்கு. ஆறு மணிக்கு முன்னால் நான் மீனாவைத் தங்கையாய் ஏற்றேன். இப்பொழுது என்னை ஒருத்தி தம்பியாய்

ஏற்றுக்கொண்டிருக்கிருள், என எண்ணி கண்ணீரைச் சிந்தினேன். தங்கையாய் ஏற்றுக்கொண்ட நான் ஒரு ஆண் இனவேசி. என்னைத் தம்பியாய் ஏற்றுக் கொண்ட அவள் ஒரு பெண் இனவேசி. எங்கள் இரு வருக்குள் ஒரு வேற்றுமை இருப்பதைக் கண்டேன். அவள் ஒரு முள்வேலியை தன்னுள்ளே இட்டுக் கொண்டு அதற்குள் கட்டுப்பாடு என்ற கதவொன்றை யும் வைத்துக்கொண்டு, நடத்துகிருள் வேசிவாழ்க்கை. நான் பிரேக் இல்லாத வண்டிபோல, குறிக்கோள் இல் லாத தன்மையோடு வேடிக்கையான வாழ்க்கையை நடத்திக் கொண்டுள்ளேன். இப்படியே எண்ணிய வனாய் வீட்டினுள் நுழைந்தேன். அங்கே என் தங்கை மீனு, விம்மி விம்மி அழுதுகொண்டு இருந்தாள்.

சென்றேன். ஏன் மீனு அழுகிருய்? என்றேன். எல்லாம் உனக்காக என்றுள். எனக்காக நீ ஏன் அழ வேண்டும்? எனக்காக நான் அழ நினைத்தாலும், கண்ணீரே வராதபோது, நீ எனக்காக எப்படி அழ முடிகிறது? என்றேன். எல்லாம் உங்கள் நல்ல குணத் தால்தான் என்றுள். புலியிடம் ஏதம்மா சைவவிரதம்? என்றேன் நான். நீ புலி அல்ல. மனிதன் தான். நீ நினைத்தால் சைவவிரதம் மேற்கொள்ள முடியும் என் ருள். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா? முற் றிய மரத்தை வளைத்திட முடியுமா? முட்செடியை முள் இல்லாமல் வளரச் செய்ய முடியுமா? என்ன மீனு சொல் என்றேன்.

நீங்கள் முற்செடி அல்ல. முள் செடியின் விதை றைப் போட்டால்தான், முள்செடி உண்டாகும். நீங்

கள் ஆலமர விதையிலிருந்து உருவான அற்புத மரம். உம்மை வேலமரமாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் அன்னையாகிய ஆலமரம் எனக்குத் தங்க இடமளித்தது. ஆனால் இந்த ஆலமரம் வேலமரமாகிக் கொண்டிருக்கிறது. நீங்கள் செல்லும் பாதைதான், உம்மை வேலமரமாக எண்ணத் தூண்டுகிறது. குமார், நல்ல பாதையில் செல்லும்போது செருப்புத் தேவையில்லை. ராமர் கூட நற்பாதையில் சென்றதால்தான், பரதன் பாதுகையைக் கேட்டவுடன் கொடுத்து விட்டார். அதேபோல் நீயும் நற்பாதையில் நடைபோடு என்றாள். நல்ல பாதையில் நடைபோட முடியவில்லையே, மீனு. நான் என்ன செய்யட்டும் என்றேன் நான். நான் யார் எனக்கேட்டாள். என்ன, உன்னை எனக்குத் தெரியாதா? நீதான், மீனு என்றேன். இல்லை, நான் ஆணு? பெண்ணு? எனக்கேட்டாள். நீ பெண்தான் என்றேன். நமது அம்மா யார்? எனக் கேட்டாள். அம்மாவும் பெண்தான், என நான் சொன்னேன்.

நீ எங்களிடம் தவருய் நடந்துகொள்ள முற்படாத போது, மற்ற பெண்களிடம் எப்படித்தவருய் நடக்க முற்பட்டு விடுகிருய், எனக் கேட்டாள். அது, அது என்று உளறினேன். அண்ணு, அதுதான் பலவீனம் என்பது. அந்த பலவீனத்தை அடக்கி விட்டாயேயானுல், நீயும் உயர்ந்த மனிதனுக, ஆலமரமாக மாறி விடலாம். என்ன சொல்கிருய் அண்ணு? எனக் கேட்டாள், மீனு. எருமை, பசுவாக முடியுமா? என்றேன் நான். நீ எருமையாய், அல்லது பசுவாய் இரு. நான்

அதற்காக வருத்தப்படவில்லை. நீங்கள் புலியாய் அல்லவா இருக்கின்றீர்கள். நீங்கள் புலியாய் மட்டும் இருக்கக் கூடாது என்பதுதான் என் விருப்பம் என்றாள்.

மீனு, கடலில் போய் அலை அடிக்க வேண்டாம் என்று கேட்டால் அலை ஓய்ந்து விடுமா? என்றேன். நான் உம்மை கடலாக நினைக்கவில்லை. கோவிலின் உள்ளே உள்ள திருக்குளமாக எண்ணுகிறேன். அதில் நீ மட்டும் கெட்ட எண்ணங்கள் என்ற கல்லையோ, மண்ணையோ போடாமல் இரு. உன்னைக் கொஞ்ச நாளில் அலை இல்லாத நீரையுடைய கோவில் திருக் குளமாக ஆக்கிக் காண்பிக்கிறேன் என்றாள் மீனு. நான் அவளை உற்றுப் பார்த்துக்கொண்டே இருந் தேன். சரி, ஒரே சமயத்தில் வளைக்க ஆரம்பித்தால் முறிந்துவிடும். இனிமேலாவது என் கண்ணில் இருந்து நீர் வராமல் இருக்குமாறு, நடந்துகொள்ளுங்கள், எனச் சொல்லிவிட்டு படுக்கச் சொன்னால் மீனு.

நான் படுக்கையில் போய்ப் படுத்தேன். எனக்குத் தூக்கமே வரவில்லை. பைத்தியம் பிடித்தவன்போல் படுக்கையில் கிடந்தேன். கல்லூரி வாழ்வு ஞாபகம் வந்தது. ஒரு சில மாணவர்கள் எனக்குப் பாழாய்ப் போன தூக்கம் வந்துவிடுகிறதே எனக் கஷ்டப்பட்டுக் கொண்டு சொன்ன வார்த்தைகள் என் காதில் ஒலித் தன. அந்த மாணவர்களெல்லாம் நல்லவர்கள். ஆகவே அவர்களால் நன்முறையில் தூங்க முடிகிறது. நான்தான் அயோக்கியத்தனத்தின் சின்னமாயிற்றே. எனக்கு எப்படித் தூக்கம் வரும்.

இப்பொழுதுதான் ஒன்று என் ஞாபகத்திற்கு வருகிறது. ஒருசில நடிகைகள் தூக்கம் வரவேண்டும் என்பதற்காக, தூக்க மாத்திரைகள் சாப்பிடுவதாய், தன் பேட்டியில் அறிவித்திருந்த செய்தியை படித்த ஞாபகம். ஆம், நல்ல செயல் செய்யாதவர்களுக்கு தூக்கம் வராது. ஏனென்றால் உள்ளத்திலோ, வெளியிலோ அமைதி பாதிக்கப்பட்டிருக்கும்பொழுது தூக்கம் எப்படி வரும். என் அன்னையின் உளரல் சத்தம் கேட்டது. என்ன உளறுகிறார்கள், என்பதை அறிய பக்கத்தில் சென்றேன். அத்தான், காசியிலிருந்து எப்போது வருவீர்கள்? எனக் கனவில் கேட்டுக் கொண்டிருந்தார்கள். கனவில் கூட கணவனின் ஞாபகம்! என்ன விந்தையான பிணைப்பு என எண்ணினேன்.

தந்தையின் ஞாபகம் வந்தது அப்போது ஒரு நாள் கல்லூரியில் என்னைப் பார்க்கவந்த தந்தையிடம், நான் நடந்துகொண்ட முறை, என்முன்னே தோன்றிற்று. நானும் ஒரு மாணவச் செயலாளன். அன்று தேசத்தந்தையின் ஞாபகார்த்த விழா. பேண்டோடும், கோட்டோடும், கழுத்தில் டை, கையில் உயர்ரகப்பை இப்படி நின்று கொண்டிருந்தேன். அப்போது என் அப்பா, டே குமார் எனக் கூறிக்கொண்டு வந்தார். அப்போது என்னைச் சுற்றிலும் என் நண்பர்கள் கூட்டம். என் தந்தையின் கோலத்தைப் பார்த்தேன். காலில் கிழிந்த செருப்பு, இடுப்பிலே கிழிந்த வேட்டி, உடலிலே பருத்திச் சட்டை, முகத்திலே தாடி, கையிலே தடி. பட்டென அறைந்து விட்டேன்.

அவர் கண்ணில் இருந்து முத்துப்போல் கண்ணீர்த் துளிகள். சில நண்பர்கள் எக்காளமாய்ச் சிரித்தனர். பல நல்ல நண்பர்கள் கண்ணீர் விட்டனர். அவரைக் கண்டும் காணாதவன் போல் உள்ளே நுழைந்து மேடையில் ஏறிவிட்டேன். 'தேசத்தந்தை' என்ற தலைப்பில் நான் பேச வேண்டியிருந்தது. பேசித் தள்ளினேன். அடுக்கு மொழியிலே, ஆபாசத்தைப் புகுத்தி அப்பளாஸ் பல வாங்கினேன். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று வாய்கிழியக் கத்தினேன். அதை இப்போது எண்ணினாலும் எனக்குச் சிரிப்புத் தான் வருகிறது. பெற்ற தந்தையை அடித்துவிட்டு, தேசத்தந்தை உயர்ந்தவரென மேடையிலே பேசினேன். அந்தப் புனித மகானைப்பற்றிப் பேச எனக்குத் தகுதியே கிடையாது. ஆனாலும் பேசினேன்.

நான் செயலாளன் ஆனதே ஒரு தப்பு வழியில் தான். அதைச் செய்வேன், இதைச் செய்வேன் என வாக்குறுதிகளை அள்ளி விட்டேன். நான் நன்முறையில் பேசுவேன். மாணவர்களையெல்லாம் மயக்கும் முறையில் பேசினேன். எங்கும் நம் தாய் மொழிதான். எங்கும் நம் பண்பாடுதான் என்றெல்லாம் அள்ளி விட்டேன். விடுதியில் ஒரு நாளைக்கு உணவிட ஒரு ரூபாய்தான் ஒவ்வொரு மாணவனுக்கும். இல்லாவிட்டால் என்னை கல்லூரியில் நிறுத்தி கல்லால் அடியுங்கள் என்றேன். இப்படியெல்லாம் வாயால் அளந்தே செயலாளன் ஆனேன். எப்போதும் பேச்சாளன் நல்ல செயலாளனாய் இருப்பதில்லை. அந்த பொன்மொழியை நான் காப்பாற்றினேன். நான்

கொடுத்த உறுதியை நிறைவேற்ற முடியாததால் இடையிலேயே என்னை பதவியைவிட்டு இறக்கி விட்டனர். அதற்குள் எங்கோபோய் விட்டேன். மச

கூட்டம் முடிந்தது. நான் வெளியே வந்தேன். என் தந்தை கண்ணீர் வடித்தவாறு நின்று கொண்டிருந்தார். அவரைக்கண்டு தயங்கி நின்றேன். அவசரத்தில் செய்துவிட்டாய். பரவாயில்லை. நீ அடித்தாலும், அணைத்தாலும் நான் உந்தன் தந்தை. வாடா என அழைத்தார். பாம்பாட்டி காட்டும் வேரின் முன் பாம்பு பணிந்துவிடுவது போல, மனிதப்பாம்பாகிய நான் அவரின் அன்பு ஊற்றிலே நனைந்தேன். தீர்த்தம்பட்ட பொருள் புனிதம் பெறுவதுபோல, நான் அந்த அன்பின் ஊற்றிலே நனைந்து நல்லவனாய் மாறி காலில் வீழ்ந்தேன். எழுந்திரு குமார் என்றார். ஸ்விட்சைப் போட்டவுடன் லைட் எரிவது போல, அவர் சொன்னவுடன் நான் எழுந்தேன். வாடா, அறைக்குப் போகலாம் என்றார். அறைக்குச் சென்றோம். பிறகு விடுதிக்குச் சென்று உண்டோம். உண்டவுடன் என் தந்தை ஊருக்குச் சென்று விட்டார்.

சிறிது நேரத்தில் நண்பன் ஒருவன் என் அருகில் வந்தான். ஏண்டா, உன் தந்தையை அடித்தாய்? என்றான். தெரியாமல் அடித்து விட்டேன் என்றேன். நீ எல்லாம் தெரிந்தேதான் செய்துள்ளாய். பிச்சைக்காரர் போல தந்தை வந்து நிற்கிறாரே? நம்மையும் பிறர் பிச்சைக்காரன் என்று எண்ணிக்

கொள்வார்களோ என்ற வெறியில் அடித்தாய். டேய், உன் தந்தையைவிட, உன் நண்பர்களின் கௌரவம் தான் உனக்கு உயர்ந்ததாய்த் தோன்றியுள்ளது உன் தந்தை இல்லாமல் இருந்திருந்தால், நீயே இல்லை. அப்புறம் ஏதடா உனக்கு நண்பர்கள் அங்கே பஞ் சாடை கட்டி, பட்டினி கிடந்து பகலென்றும் இர வென்றும் பாராமல் உழைத்து, கதிர்மணிகளை கண் மணிகளாக எண்ணி, அவற்றை அறுத்து விற்று உனக்கு அனுப்புகிறார்கள் பணத்தை. இங்கே நீ பட் டாடை உடுத்தி, பவுடர் பூசி பாங்காக உண்டு, ஸ்டைலாக நடந்து பவனி வருகிறாய். அங்கே ஏரோட் டம் நின்றால் இங்கு ஏதடா உன் கையில் ஓட்டம். பக லெல்லாம் பத்தினியை நாடி ஓட்டம். மாலைப் பொழு தில் கள் குடிக்க பனமரத்தை நாடி ஓட்டம். பகலிலே மங்கை வெறி. இரவிலே மது கொடுக்கும் வெறி. வெறியோட்டம் போட்ட வெறியனே இனி என்னோடு பேசாதே. தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை. அந்த தாய்க்கே தெய்வமடா, உன் தந்தை. அவரை அடித்த உன் கை புழுத்துத்தான் போகும். போடா, டே, உன் நெற்றியில் திருநீறு வேறு. போடா, போ என என் நண்பன் கூறிவிட்டுப் போன சொற்கள் என் காதில் ஒலித்தன. ஆம் இதெல்லாம் கல்லூரி நினைவுகள்.

இப்படியே நினைவலைகளில் மோதிக்கொண்டிருந்த எனக்கு எப்படித் தூக்கும் வரும். சேவல் தன் கட மையைச் செய்யத் துவங்கி விட்டது. பால்காரன் வந்து கதவைத்தட்டி இந்தாங்க பால் என்றான்.

எனக்கு எரிச்சலாய் இருந்தது. கதவைத் திறந்து கொண்டு ஏய்யா, பாலை பகலில் கொண்டு வந்தால் என்ன? பால் தண்ணீராய் இருக்கிறது என்று சொல்வார்கள் என்பதற்காக இரவிலேயே கொடுத்து விடுகிருயே? என்றேன். ஆமாம் தம்பி பகலில் பயந்து கொண்டு தண்ணீரைக் கலக்க வேண்டும். இரவிலே அந்தப் பயமெல்லாம் கிடையாது. இது என்ன தம்பி ஒரு சில பணக்கார வீட்டுப் பையன்களும், பெண்களும் சினிமா பார்க்கப் போவதாக வீட்டில் சொல்லிவிட்டு, வேறு எங்கேயோ சென்று இழக்கக்கூடாததை இழந்து விட்டு வந்து விடுகின்றனர். தம்பி நான் நீரைப் பாலில் கலப்பதால் அதை குடிப்பவரின் வயிற்றினுள் தண்ணீர்ப் பால்தான் செல்கிறது. ஆனுல் அவர்கள் செய்யும் தவற்ருல் விஷமே கலந்து விடுகிறது. நேற்று ஒரு பெரிய மனிதர் தன் ஒரேமகள் தவருன வழியில் சென்று விட்டாள் என்பதை அறிந்து தற்கொலை செய்து கொண்டார். என் மாமியார் தன் மகன் விலை மாதுவின் வீட்டுக்குப் போய்விட்டான் என்பதை அறிந்து பைத்தியமாக மாறிவிட்டார்கள். தன் பிள்ளை நல்லவனுய்த்தான் வாழவேண்டும் என்று ஒவ்வொரு பெரியவரும் நினைக்கின்ருர்கள் என்ருன் பால்காரன்

இப்போது வரும் சினிமாவெல்லாம் சினிமா மாதிரியா இருக்குது? என்றேன் நான். அதை ஏன் தம்பி சொல்கிருய். ஒரு சிலர் பணக்காரர்கள் ஆவதற்காக ஒரு சில ஆண்களுக்கும், பெண்களுக்கும் பணத்தை வாரி இறைத்து மிகவும் அசிங்கமாக நடிக்கச் சொல்லி எத்தனேயோ பிஞ்சு உள்ளங்களை அழித்து, அவர்கள்

வாழ்க்கையை கெடுத்து, நாட்டையும் குட்டிச்சுவராக்கி விடுகிறார்கள். இந்த அக்கிரம நிகழ்ச்சிகள் நடக்கலாமா? போங்க தம்பி கண்ணீர்தான் வருகிறது. மற்றவனைக் கெடுத்துதான் வாழனும் என்கின்ற குணம் மிருக குணம். இந்தக் குணம் அழிக்கப்பட வேண்டிய ஒன்று. ஏப்பா சென்ஸார் போர்டு இருக்கிறது என்கிறார்களே? அவங்க எல்லாம் என்ன செய்து கொண்டுள்ளார்கள் என்று என்னைக் கேட்டான் பால்காரன்.

பால்காரரே நீகேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமென்றால் ஒரு உதாரணம் சொல்லித்தான் சொல்லவேண்டும். ஒரு சிரிப்புப்படம் வந்திருக்கிறது. ஒரு நடிகை தன் குழந்தையை, எங்கே நீ போட்டிருந்த ஜட்டி? நிர்வாணமாய் வந்து நிற்கிறாயே எனக்கேட்கிறாள். உடனே அந்த குழந்தையை போர்டில் யேஸப்பார்க்கிற மாமா இந்த ஜட்டி உனக்கு எதற்கு என்று கத்தரிக்கோலால் கத்தரித்து எறிந்துவிட்டார், என சொல்கிறது. இதே மாதிரிதான் சென்ஸார் போர்டும் நடந்து கொள்கிறதோ, என்று நான் எண்ணுகிறேன் என்றேன். மோசம், மோசம் என்றார் பால்காரர்.

பால்காரரே நீ சொல்வது முற்றிலும் சரி பால்காரரே நான் உண்மையிலேயே உன்னைப் பாராட்டுகிறேன். நீ செய்யும் தவற்றைச் சொல்லி விட்டாய். ஆனால் ஒரு சில நடிகைகள், டைரக்டர் நீச்சல் உடையில் நடிக்கிறாயா? எனக்கேட்டாலும், அது எதுக்கு சார், அந்த உடைகூட இல்லாமலே நடிக்கிறேன் என்று சொல்லி

விடுவார்கள் போல இருக்கிறது. அதனால் என் போன்ற இளைஞர்களின் உள்ளமெல்லாம் கெட்டு அழிந்து விட்டது. ஆபாசம் இருந்தால்தான் காசு சேரும் எனச் சில தயாரிப்பாளர்கள் கூறுகின்றனர். ரசிகர்களை எவ்வளவு மட்டமாய் அவர்கள் நினைக்கிறார்கள் என்பதை அந்த வார்த்தைகள் எடுத்துக் காட்டுகின்றன. பால்காரரே, எனக்கு மட்டும் போதிய பணம் கிடைத்தால் திரைக்கதை, வசனம், பாடல்கள், டைரக்ஷன் அனைத்தையும் ஏற்று ஒரு ஆபாசமில்லா படத்தை எடுத்து வெற்றிகரமாய் ஓட்டிக்காண்பிப்பேன். இது சத்தியம் என்றேன் நான்.

தங்களுக்குப் போதிய பணம் கிடைக்கவேண்டும் போய்வருகிறேன் எனச்சொல்லிவிட்டு புறப்பட்டான். நான்பாலைக்கையிலேந்தி வீட்டினுள் சென்றேன். என் வாழ்க்கையின் நிலைபோல மெதுவாக எரிந்து கொண்டிருந்த விளக்கைத் தூண்டினேன். பிரகாசமாக எரிய ஆரம்பித்தது. அவன் கொடுத்த பாலைப் பார்த்தேன். தண்ணீரே இல்லாமல் நல்ல பாலாக இருந்தது. எவ்வளவு நல்ல பால்காரன் எனப்பாராட்டிவிட்டு, ஒரு இடத்தில் பாலை வைத்து மூடினேன். விளக்கைத் தூண்டி வைத்த ஞாபகம் உடனே வந்தது. போய் ஒளியைச் சிறிதாக்கினேன். விளக்கைக் கூடத் தூண்டினால் அதிக வெளிச்சம் தருகிறது. ஆனால் என்னை மட்டும் நான் நல்லமனிதனாக தூண்டிக்கொள்ள முடியவில்லையே என எண்ணியபோது வருத்தமாய் இருந்தது.

வருத்தப்பட்டு என்ன செய்ய என படுக்கையில் போய்ப் படுத்தேன். இரண்டாம் தடவையாக சேவல் கூவியது. கொஞ்சம் கூடச் சம்பளம் வாங்காமல் எவ்வளவு ஒழுங்காக தன் கடமையைச்சேவல் செய்கிறது, என எண்ணியபோது எனக்கு அதிசயமாய் இருந்தது. ஆனால் நான் அரசாங்க சம்பளத்தை வாங்கிக் கொண்டு அலுவலகத்தில் ஒழுங்காக பணிசெய்யாமல் பொய்யாக ரிப்போர்ட் கொடுத்துக்கொண்டு, மேல் அதிகாரியைப் புகழ்ந்து பேசிக்கொண்டும், டைப்பிஸ்ட் மாலவை பார்த்துக்கொண்டும் காலத்தை ஓட்டுவதை எண்ணி வருந்தினேன்.

நாம் என்ன பெரிய தவறு செய்கிறோம். எனக்குப் பெரிய அதிகாரியாய் இருக்கும் சுந்தர் செய்யும் அக்கிரமத்தைவிடவா நான் அதிகம் செய்கிறேன். அவரைப்போல் மாலாவை அடிக்கடி கூப்பிடுவதும் அவளைத் தொட்டுப் பேசிக்கொண்டும், சிரித்துக் கொண்டுமா, இருக்கிறேன். காரியம் நிறைவேற வேண்டும் என்பதற்காக, அவரிடம் பலர் இலஞ்சம் கொடுக்க வரும்போது இது போதாது, இன்னும் அதிகமாய் வேண்டுமென்று கேட்கிறேன். அரசாங்கக் காருக்குப் பெட்ரோல் போட்டேன் என பில் போட்டுத் தன் காருக்கு அவர் பெட்ரோல் போட்டுக்கொள்வதைப் போல் நான் என் சைக்கிளுக்கா பெட்ரோல் போட்டுக் கொள்கிறேன். கலெக்டர் வருகிறார், அவருக்கு விருந்து வைக்கவேண்டும் என வசூலித்துத் தனக்கு விருந்து வைத்துக்கொள்வதைப்போல் நான் செய்கிறேனா? இல்லையே. நான் செய்யும் தவறெல்லாம் மிகச் சிறியது என எண்ணி கண்ணை மூடினேன்.

எனது ஒரே சாட்சியாகிய மனசாட்சி நீ குற்றவாளி, குற்றவாளி எனக்குற்றம் சாட்டிக்கொண்டே இருந்தது. உனக்குத் தூங்க அனுமதி கிடையாது என்பதுபோல், எங்கள் ஊர்ச்சங்கு கத்த ஆரம்பித்தது. என்னடா கொடுமை என்று ஓலமிட்டேன். சரி இனி எனக்குத் தூக்கமில்லை என எழுந்து நடந்தேன். மீனு படுத்துக் கிடந்தாள். நான் மட்டும் அவளிடம் தவறாய் நடந் திருப்பேனேயானால், அவள் இந்நேரம் உறங்கிக் கொண்டா இருப்பாள்? நிச்சயம் உறங்கமாட்டாள். தவறாய் வாழ்க்கையைச் செலுத்தி விட்டோமே என உறுமிக்கொண்டிருப்பாள். சரி அவளாவது தூங்கட்டும் என எண்ணி வாசலை நோக்கி நடந்தேன்.

அங்கே நின்று கொண்டிருந்த என் வீட்டு நாய் என்னைப்பார்த்து குலைத்தது. என்னடா, ஒரு நேரம் உணவு இட்டிருந்தாலே, அந்த உதவிக்கு நன்றியைத் தெரிவிக்கும் பொருட்டு வாழ்நாள் முழுதும் வாலை ஆட்டுகின்ற குணத்தையுடைய நாயினத்தைச் சேர்ந்த இந்த நாய், தன் வாழ்நாளையே இங்கு கடத் திக்கொண்டு இருக்கும்பொழுது என்னைப்பார்த்து குலைக்கிறதே என நான் எண்ணினேன். கொஞ்ச நேரம் பொறுத்துத்தான் அது குலைப்பதின் உண் மையை உணர்ந்தேன். தவறு செய்த தன் பிள்ளையை அன்புகொண்ட தந்தை திட்டித் திருத்துவதுபோல, என்மேல் அன்புகொண்ட இந்த நாயும், நீ தவறான பாதையில் செல்கிறாய். செல்லாதே என்பதுபோல் சொல்கிறது என எண்ணினேன். பிறகு அதன் பக் கத்தில் சென்று முதுகைத் தடவினேன். நான் தவறாக

மேல் செல்ல மாட்டேன் எனச் சத்தியம் செய்வதாக எண்ணிக்கொண்டு வாலை ஆட்ட ஆரம்பித்தது. அதன் பேதமையை எண்ணி வருந்தினேன்.

இனிமேல் என்னால் திருந்த முடியுமா? சத்தியம் செய்தாலும் அந்த சத்தியத்தை என்னால் காப்பாற்ற முடியுமா? என்ன பேதமை இந்த நாய்க்கு என எண்ணி வருந்தினேன். முகத்தைக் கழுவலாம் என எண்ணிக் கிணற்றருகே சென்றேன். கிணற்றினுள் எட்டிப் பார்த்தேன். பிரகாசமான வெளிச்ச ஒளியில் என் முகம் தென்பட்டது. அழகாகத்தான் இருந்தது. நாகபாம்பு படம் எடுத்தால் கூட அழகாய்த்தான் இருக்கிறது எ எண்ணியவனாய் தண்ணீரை இறைத்தேன். வ யை எடுக்கும் பொருட்டு கிணற்றினுள் எட்டி எடுத்தேன். அப்போது என் முகத்தைப் பார்க்க முடியவில்லை. அதில்தான் நான் வாளியை விட்டு சலனத்தை ஏற்படுத்தி விட்டேன். பின் எப்படி என் உருவத்தைக் காண இயலும்.

பிறகு முகத்தை வாளித் தண்ணீரால் கழுவ ஆரம்பித்தேன். அந்த சுத்த நீர் என் உடம்பில் பட்டவுடன் அழுக்காய் மாறியது. அய்யோ, எவ்வளவு மோசமான பிண்டம் இது. இதனை அழகாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக, எத்தனைப் பவுடரைக் கொட்டிக் கொள்கிறேன். எத்தனை சோப்பைத் தேய்த்துத் தீர்க்கிறேன். எவ்வளவு தூய நீரை அசுத்தமாக்கி விடுகிறேன். இத்தனையையும் எண்ணியபோது

எனக்கு வருத்தமாய்த்தான் இருக்கிறது. ஒருவாறு முகத்தைக் கழுவிக்கொண்டு வீட்டினுள் சென்றேன்.

அடுப்பு எரிந்து கொண்டிருந்தது. ஒரு அடுப்பில் பாலும், இன்னொரு அடுப்பில் காப்பியும் காய்ந்து கொண்டிருந்தன. விறகு தன்னையே அழித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரம் கழித்து என் அன்னை காப்பியையும் பாலையும் கலந்தார்கள். கறுப்பு நிறக் காப்பி சிறிது வெள்ளையாக மாறிற்று. வெண்மையின் குணமே, மற்றவற்றையும் வெண்மையாய் மாற்றுவது தான் குமார் என்று அன்னை சொன்னாள். நான் அதை ரசித்தேன். இப்படித்தான் கெட்ட பையன் நல்ல பையனோடு நட்பு வைத்துக்கொண்டால் கூடிய சீக்கி ரத்தில் கெட்டவனும் நல்லவனாய் மாறிவிடுவான் என்று அன்னை கூறினாள்.

அது உண்மைதான் அம்மா என்று சொல்லிவிட்டு எனக்காகத்தான் சொல்கிறார்கள் என்று மனத்துக்குள் எண்ணிக்கொண்டேன். ஒரு டம்ளர் நிறையக் காப்பி யைக் கொடுத்து இன்னொரு டம்ளரையும் கொடுத்தார் கள். டே, குமார் நான் எதற்கு இன்னொரு டம்ளரைக் கொடுத்தேன் தெரியுமா? நம் வீட்டில் நிறைய டம்ளர் இருக்கிறது என்பதற்காகக் கொடுக்கவில்லை. சூடாக இருந்தால் காப்பியை ஆற்றிக் குடித்துக்கொள்வாய் என்பதற்காகத்தான் கொடுத்தேன். திருமணம் என் பதன் தத்துவமே இதுதான். ஆணுக்குத் துன்பம் ஏற்படும்பொழுது அதைப் பெண்ணிடமும், பெண்ணுக் குத் துன்பம் ஏற்படும்பொழுது அதை ஆணிடமும்

சொல்லிக் குறைத்துக் கொள்வதற்காகத்தான். அந்த ஆணும் பெண்ணும் சமுதாயத்தால் கணவன், மனைவி என அழைக்கப்படுகிறார்கள். புரிகிறதா என்றார்கள் என் அன்னை. புரிகிறது என்றேன் நான்.

அப்பப்பா இந்த ஒரு டம்ளர் காபி குடிப்பதற்குள் எவ்வளவு அறிவுரைகளைக் கேட்க வேண்டியுள்ளது என எண்ணி வருந்தினேன். நல்லவர்களுக்கு அறிவுரை இனிமையாய்த்தென்படும். கெட்டவனுக்கு அறிவுரை என்பது விஷமாகத்தான் தோன்றும். சாணிப் புழுவின் மேல் சந்தனத்தைத் தெளித்தால் செத்துத் தானே போகும். இந்தக் கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை என எண்ணிக்கொண்டு, தோட்டத்திற்குப் போய்வருகிறேன் எனச் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

நகரை விட்டு கால்மைல் தள்ளி உள்ளது எங்கள் தோட்டம். நகர் எல்லையைத் தாண்டினேன். பகலவன் தன் பொற்கிரணங்களை கிழக்குத் திசையில் பரப்பிக் கொண்டிருந்தான். புலி துரத்தினால் ஓடும் மனிதனைப் போல, பகலவன் தோற்றத்தைக் கண்டு ஏழைகள் விரைந்து நடந்து கொண்டிருந்தனர். அந்த பாமரர்க்கு காலத்தைக்காட்டும் கடிகாரம் அதுதானே. நேரமாகிவிட்டது, கழனிக்குச் செல் என அறிவுறுத்தும் முதலாளியாய் அவர்களுக்கு ஆதவன் தோன்றினான் போலும். தோட்டத்தினுள் நுழைந்தேன். பயிர்கள் பச்சையாய் வளர்ந்திருந்தன. அங்கொன்றும் இங்கொன்றுமாக வண்ண மலர்கள் மலர்ந்திருந்தன.

அவைகளெல்லாம் மாலையில் நகர்க்குச் சென்று மாதுக்களின் தலையில் ஏறப்போகிறது என்று எண்ணியவுடன், மலராய் நான் பிறந்திருக்கக்கூடாதா? என்று தான் எண்ணினேன். சீ, என்ன மோசமான எண்ணம் என்று சிறிது நேரத்தில் தெரிந்து கொண்டு அதற்காக வருந்தினேன்.

காலைக்கடனை முடித்து கால், கைகளைக் கழுவினேன். பிறகு குளித்தேன். அந்தக்குளிப்பு என் உடலில் உள்ள அழுக்கிலேயே பலவற்றைப் போக்க முடியவில்லை. அப்புறம் என் உள்ளத்தில் உள்ள அழுக்கை எங்கே போக்கப் போகிறது. என்னவோ நான் அணிந்திருந்த ஆடைகளை நனைத்துப் பிழிந்து மறுபடியும் உடுத்திக்கொண்டு, தோட்ட வேலையாளிடம் நான் வீட்டுக்குப் போகிறேன் எனச்சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். போய் வாங்க எசமான் என்று அப்பொழுது வேலைக்காரன் சொன்னது என் காதில் ஒலித்தது. அயோக்கியனாகிய என்னையும் எசமான் என்று கூப்பிட ஒரு ஜீவன் உள்ளதே, என எண்ணியபோது வருத்தமாய் இருந்தது. என் தந்தையும், தாயும்தான் என்னை முதலாளி என பிறர் அழைக்கக் கூடிய வகையில் பணத்தையும், நிலத்தையும் சேர்த்து வைத்துள்ளனரே. சரி அது நான் முற்பிறவியில் ஏதாவது ஒரு நல்லகாரியம் செய்திருப்பேன். அதனால்தான் என எண்ணியவனாய் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தேன்.

வழியிலே பல நண்பர்கள் குமார், என்ன சௌக்கியமா? எனக் கேட்டனர். சௌக்கியம் எனச்சொல்லி விட்டுப் புறப்பட்டேன். உன்னுடைய புருஷனை ஒழுங்காக இருக்கச்சொல். இல்லையேல் விபரீதம் நடந்து விடும் என்று ஒரு குரல் கேட்டது. குரல் வந்த திசையை நோக்கினேன். அங்கு ஒரு வயதான மனிதர் இளம்பெண்ணை நோக்கி எச்சரித்த குரல்தான் அது. இந்தக் குரலைக் கேட்டவுடன், என் அதிகாரியின் ஞாபகம்தான் வந்தது.

அவர் செய்யும் தவறுகளையெல்லாம் அவர் மனைவியிடம் சொல்லிவிட வேண்டும் என்று எண்ணினேன். அதிகாரி வரும்வரை அலுவலைக் கவனிப்பது. அவர் அலுவலகத்திற்கு வந்தவுடன், பக்கத்துக் கிராமத்துக் கர்ணத்திடம் வேலை இருப்பதாகச் சொல்லிவிட்டு, அதிகாரியின் வீட்டுக்குச் சென்று அவர் மனைவியிடம் சொல்லிவிடுவது, எனத் தீர்மானித்தேன். ஆகவே விரைவாக என் வீட்டை நோக்கி நடைபோட ஆரம்பித்தேன். வீட்டை அடைந்தேன்.

என்னடா குமார், இன்று வேகமாய் வந்துவிட்டாயே? என்று கேட்டார்கள் என் தாய். இன்று பெரிய அதிகாரி வருகிறார். அதனால் விரைவாக அலுவலகம் செல்லவேண்டும், எனச் சொல்லி முடித்தேன். மீனு பவுடர் டின்னோடு வந்து நின்றாள். எதற்கு எனக்குப் பவுடர் என்றேன். இந்தப் பவுடரை உங்கள் முகத்துக்குப் பூசாவிட்டால் போகிறது. உள்ளத்திற்குப் பூசிக் கொள்ளுங்கள். எப்போதுமே உள்ளம்தான் தூய்மை

யாய் இருக்கவேண்டும் என்று சொன்னாள் மீனு. இனி மேல் தூய்மையாக இருக்க முயற்சி செய்கிறேன், என நான் சொன்னேன்.

பூரண அலங்காரம் செய்து கொண்டேன். புனித மான மனிதர்கள் மட்டும் பூசக்கூடிய விபூதியையும், குங்குமத்தையும் நான் பூசிக்கொண்டேன். பிறகு கண்ணைமூடி இறைவனை வணங்கினேன். என் கண் முன் இறைவர்கள் தோன்றவில்லை. இளம் பெண்கள் தான் தோன்றினர். கண்ணைத்திறந்தவுடன் இறை வனின் படத்தைத்தான் பார்க்கவேண்டும், என உறுதி செய்து கொண்டு கண்ணைத் திறந்தேன். கண்ணைத்திறந்து பார்க்கும் போது இறைவன்தான் தென்படுவார் எனக் கண்ணைத் திறந்தால், கடவுள் இல்லை. நான் மாட்டிவைத்த ஆபாசக்கன்னியின் படம்தான் தென்பட்டது. இது எனக்கு வேதனையாய்த் தோன்றியது. என்ன செய்வது? நம்ம தகுதிக்கு ஒத்த வர்தானே, நம் கண்ணில் படுவார் என எண்ணிக் கொண்டு, சும்மா இருக்க முயற்சி செய்தேன்.

வாழை இலை விரித்துப் போடப்பட்டு, சுத்தமாகத் தண்ணீரால் கழுவப் பட்டிருந்தது. அம்மா, நம் அண்ணுவுக்கு இன்று நான் பரிமாறப் போகிறேன் என்று உணவைக் கொண்டு வந்தாள் மீனு. பதினாறு முழச்சேலையைக் கட்டி, பட்டுத்துணியால் தைக்கப் பட்ட ரவிக்கையைப் போட்டுக் கொண்டு, நெற்றியில் குங்குமம் துலங்க, வாயில் புன்னகை தவழ, கையிலே வளையல் குலுங்க, பத்தரைமாத்துப் பெண்போல், பவனிவந்தாள் மங்கையாம் என் தங்கை. இந்த அற்

புதத்தீபம் வறுமையின் கொடுமையில், தன் கற்பை யே அழித்துக்கொள்ள நேற்று அலைந்ததே என எண்ணி வருந்தினேன்.

அண்ணு நன்முறையில் சாப்பிட வேண்டும், எனக் கூறி பரிமாறினுள். வாழைப் பூக்கரியும், தண்டங்கீரை யும், கத்திரிக்காயும், உருளைக்கிழங்கும், தக்காளிப்பழ மும், கரிவகைகளாகப் பரிமாறப்பட்டன. பார்த்தாயா அண்ணு, இன்று உனக்கு பறிமாறப்பட்ட உணவில் பூ, காய், கனி, இலை, கிழங்கு அனைத்தும் உள்ளது எனச் சொன்னுள். ஆம் உன்னைப் போன்ற பெண்ணி டம் கற்பு, எளிமை, இரக்கம், பண்பு, தியாகம் அனைத்தும் இருக்கவேண்டும் என்றேன் நான். சாம் பார், ரசம் சாப்பிட்டபிறகு, கெட்டியான தயிரைக் கொட்டினுள் மீனு.

புல்லை உண்ட பசு அதை ரத்தமாக்கி, அந்த ரத்தத்தைப் பாலாக்கி மடியில் தேக்குகிறது. கன்றைக் காட்டியவுடன் சுரக்கிறது. சுரந்தவுடன் பாலைச் சுரண்டக் கறந்து விடுகிருன் மனிதன். அந்தப் பாலில் மோரை ஊற்றித்தயிராக்கி, அதைத் தன் தனயனுக்கு இடுகிருள் வீட்டு அன்னை. என்ன விந்தை என உண் டேன். உண்டு முடித்தவுடன் எச்சிலையானது. சற்று நேரத்தில் எச்சில் தொட்டியைச் சரண் புகுந்த இலைக் காக சண்டை, ஒட்டியிருந்த உணவைஉண்ண இரண்டு உயிர்கள் மோதிக்கொண்டன. ஒரு உயிர் நாய். மற் ெருரு உயிர் பாய் (பையன்).

தெருவினிலே ஒரே கூட்டம். பகலவன் தன் கிரணத்தைப் பதித்துவிட்ட நேரத்திலும், பாதையிலே பாமரர்கள் படுத்துக் கிடந்தனர். அந்த பேதமையை எண்ணினேன். பசிக்கொடுமையால் படுத்துக் கிடக்கின்றனரோ? என என் உள்ளத்தின் ஒரு ஓரத்தில் கேள்வி எழுந்தது. என்னவோ தெரியவில்லை. ஏழைகளைக் கண்டால் என் உள்ளம் வாடும். ஆனாலும் அந்த ஏழ்மைக் கோலத்தில் இளமையும், அழகும் கலந்த பெண்ணைக் கண்டு விட்டால், என்னுள்ளேயே ஒரு வெறித்தன்மை உண்டாகி விடுகிறது. எலியைக் கண்ட பூனை, அதைக் கொன்று உண்பதிலேயே தன் கவனத்தைச் செலுத்துவது போல, நான் அந்த ஏழைப்பெண்ணின் இளமையையும் அழித்து, கற்பையும் கெடுத்து காம இன்பத்தைப் பெறுவதிலேயே என் கவனமும் சென்று விடுகிறது.

பல தடவைகள் தவறைச் செய்துவிட்டு, செய்ய மாட்டேன் இனித்தவறு என எத்தனையோ தடவை சத்தியம் செய்து கொண்டதுண்டு. எங்கே சத்தியம் நிற்கிறது. தீயின் பக்கத்தில் சென்றவுடன் மெழுகு உருகி விடுவது போல, பெண்களின் பக்கத்தில் நான் சென்றவுடன் எனது சத்தியம் எரிந்து சாம்பலாகி விடுகிறது. நண்பர்களே, அன்பர்களே, யாரேனும் என்னைப்போல் சத்தியத்தை அழித்துக்கொண்டு இருப்பீர்களேயானால், இதைப்படித்த பிறகாவது திருந்த முயற்சியுங்கள். என் ஆத்மாவுக்காகவாவது திருந்துங்கள்.

கெட்டவழியில் வரும் இன்பத்தின் ஆயுள் மிகக் குறைவு. அத்தோடு கெட்ட வழியில் இன்பம் பெறுப வனின் ஆயுளும் குறைவு என்பதை அறிந்து கொள்ளுங்கள். இப்படியே எண்ணியவனாய் அலுவல கத்தை அடைந்தேன்.

அலுலக நுழைவு வாயிலில் மாலா நின்று கொண் டிருந்தாள். சின்ன ஆபீசர், வாங்க, என்று சிரித்துக் கொண்டே வரவேற்றாள். நான் இன்னும் கொஞ்ச நாளில் பெரிய ஆபீசராய் ஆகிவிடுவேன். என்ன மாலா சொல்கிறாய்? என்றேன் நான். தன்னுடைய மார்பை மறைத்துக்கொண்டிருந்த தாவணியை நகர்த்தி விட்டுக்கொண்டே, ஆமாம் நீங்க பெரிய ஆபீசராய் ஆகிவிடுவீர்கள் என்றாள். சற்று நேரம் அவள் செய்கையையே பார்த்துக் கொண்டிருந்தேன். என்ன சார் உற்றுப் பார்க்கிறீர்கள்? என்றாள். இல்லை, நான் எண்ணத்தை பார்த்தேன் என்றேன்.

பெரிய ஆபீசரானால் உலகில் எதையும் பார்க்க அனுமதிக்கப் படுவார்கள், என்றாள். அவள் என்ன கருத்தில் சொல்கிறாள் என்பதை நான் புரிந்து கொண் டேன். மீன் குஞ்சுக்கு நீந்தக்கற்றுக்கொடுக்க வேண் டுமா? எனக்கு இந்த விஷயத்தில் புரியாதது ஒன்று மில்லையென எண்ணியவனாய் எனது இருக்கையை நோக்கி நடக்க முயன்றேன். ஒரு பெண் தவறாய் நடக்க ஆரம்பித்தால் அவளால் ஆயிரம் ஆண்களையும்

கெடுக்க முடியும், என்று ஏதோ ஒரு படத்தில் வந்த வசனம் என் காதில் ஒலித்தது. இந்த மாலாவைப் பார்த்துதான் அதன் கதையாசிரியர் எழுதினரோ, என எண்ணினேன். அப்போது அவள் என் அருகில் வந்தாள். வந்து நின்றாள்.

எனக்குத் தலைவலி சார். நான் இன்று அரைநேர விடுமுறை எடுத்துக்கொண்டு வீட்டுக்குச் செல்கிறேன் நீங்களும் வருகிறீர்களா என்றாள். எனக்குத் தலைகால் புரியவில்லை. நீ போ, நான் வருகிறேன், எனச்சொல்லி விட்டு சில வேலைகளைக் கவனித்தேன். வேலையில் கவனம் செல்லவில்லை. வருகிறீர்களா? என்று அவள் கேட்ட கேள்விதான் என்னையே சூழ்ந்து கொண்டிருந்தது. ஒரு மணிநேரம் சென்றது.

பக்கத்து கிராமத்துக்குச் செல்கிறேன், என ஆபீசரிடம் சொல்லிவிட்டு மாலாவின் வீட்டை நோக்கி நடைபோட ஆரம்பித்தேன். அவளின் வீட்டை அடைந்தேன். உள்ளே இருந்து ஒரு கல்லூரி வாலிபர் வந்துகொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் சிரித்தார். அந்தச் சிரிப்பு எனக்கு விஷச்சிரிப்பாய் இருந்தது. டேய் மாணவா, இன்னும் கொஞ்சநாளில் உன்னைப்பார்த்து ஊரே சிரிக்கப் போகிறது. இரும்பு அடிக்கிற இடத்தில் ஈயிக்கு என்ன வேலை. இரும்பு பிடித்தவன் கையும், சிரங்கு பிடித்தவன் கையும் சும்மா இருக்காது. அதேபோல் ஒரு தடவை கெட்ட பாதையில் சென்றுவிட்டால், தொடர்ந்து அப்பாதையிலேயே செல்லத்தான் விரும்புவோம். அதுவும்

கெட்டபாதை என்பது பஞ்சு மெத்தையில் படுத்துறங்குவது போன்றது. என்னவோ படிக்கும்போதே உன் வாழ்வை ஏன் கெடுத்துக் கொண்டாய்? என அவனை நோக்கி என் மனத்துக்குள்ளேயே கேட்டுக்கொண்டேன்.

நான் கதவைத் திறந்துகொண்டு வீட்டினுள்ளே சென்றேன். மாலா பஞ்சு மெத்தையில் அலங்கோலமாய் படுத்துக் கிடந்தாள். வாழ்வது ஒரு பெண். ஆனால் எவ்வளவு பெரிய வீடு? என என்னுள்ளேயே கேட்டுக்கொண்டேன். வாழ்கின்ற வீடு பெரியது. அவள் வளர்த்துள்ள உள்ளம் சிறியது. முன்னே ஒரு தடவை வந்துள்ளேன். ஆனால் நான் வெளியே நின்று கொண்டிருந்தேன். எனது ஆபீசர்தான் உள்ளே சென்றிருந்தார். ஒருசில இடங்களில் என்னை உள்ளே போய் அவரைக் கூட்டிவா எனச்சொல்லிவிட்டு வெளியே நிற்பார். ஆனால் இங்கு வந்தால்மட்டும் என்னை வெளியேயே நிறுத்தி வைத்துவிடுவார். இப்படி நடந்தவற்றை எண்ணியவாறே வீட்டினுள்ளே நடைபோட்டுக் கொண்டிருந்தேன்.

வாங்க சின்ன ஆபீசர் என்று வரவேற்றாள். சின்ன ஆபீசர் என அழைப்பது கிண்டலுக்காகதான். அவளின் வரவேற்பைக் கேட்டவுடன் ஆனந்தம் அடைந்தேன். சரி இப்பொழுது இங்கிருந்து ஒரு மாணவர் போகிறாரே அவர் யார்? என்றேன் நான். அவர் எனது அண்ணன் என்றாள். சும்மா கதைவிடக் கூடாது. எங்கே நான் அந்தப் பையனின் அக்காவா நீ எனக்

கேட்டு உன் வயதைக் கூட்டிவிடுவேன் என நினைக்கிருயா? சொல்லு மாலா. நமக்குள் என்ன ரகசியம் எனக் கொஞ்சலாகக் கேட்டேன்.

அவர் இங்கே கல்லூரியில் பயிலும் மாணவர். நான் அலுவலகத்திற்கு வருவதே பல இளம் வாலிபர்களின் கவனத்தை என் பக்கம் திருப்பத்தான். என் போன்ற சில வேஷதாரி டைப்பிஸ்டுகளால், உண்மையான டைப்பிஸ்டுகளையும் கெட்டவர்களாக உலகம் எடைபோட்டு வருகிறது. அந்தப் பெண்கள் டைப்பிஸ்டாய் பணிபுரிவது வீட்டில் வறுமையில் அழுந்திக்கொண்டு இருக்கும் தாய் தந்தையரின் பசியைப் போக்க. அடுப்பில் பூனை படுக்காமல் இருக்க. ஆனுல் நான் பணிபுரிவது, அலுவலகம் செல்லுவது போல் அலுவலகம்சென்று அலுவலகம்,போகும்பாதை, எல்லா இடத்திலும் பல வாலிபர்களின் உள்ளத்தைக் கவர்கிறேன். காந்தத்தை நாடும் இரும்புத்துண்டு போல, என்னை நாடுகின்றனர் அந்த வாலிப பிண்டங்கள் என்ருள்.

சரி உன் சாகசம் இருக்கட்டும். இந்த மாணவன் இங்கே எப்படி வந்தான், அதைச் சொல் என அவசரமாய்க் கேட்டேன். நான் என்றும்போல் தெருவில் வந்து கொண்டிருந்தேன். இவர் எனக்குமுன் சென்று கொண்டிருந்தார். நான் அவர் அருகில் வந்தவுடன் காற்றில் தாவணி அடித்துச் செல்லப்படுவதுபோல பறக்க விட்டேன். என்னவோ கஷ்டப்பட்டு அந்தத் தாவணியைப் பழையநிலைக்குக் கொண்டுவருவது

போல்கொண்டுவந்து என்தோளில் போட்டுக்கொண்டேன். இப்படியே ஐந்தாறுதடவை என் தாவணியைப் பறக்கவிட்டேன். ஏதோ ஒரு பெரிய ஆள் பாடியிருக்கிறரே "பிறந்த இடத்தைத் தேடுதே பேதை மடநெஞ்சம். கறந்த இடத்தை நாடுதே கண்" எனச் சொன்னுள்.

அப்புறம் என்ன நடந்தது? என்றேன். என் கண்ணும் அவர் கண்ணும் சந்தித்தன. என் கண்தான் விஷம் தோய்ந்த அம்பாயிற்றே. என் பார்வைபட்டவுடன் மயங்கிவிட்டார். என் நிழலாய்த் தொடர்ந்து வந்தார். வந்து கதவைத் திறந்து உள்ளே நுழைந்தேன். அவரும் பின்தொடர்ந்தார். வாருங்கள் உள்ளே என்றேன். கையில் படிக்கும் புத்தகங்களை வைத்துக்கொண்டிருந்தார். புத்தகத்தை அங்கேயே வையுங்கள் என்று சொன்னேன். நான் படித்தவள் என்பதை அந்த மாணவரிடம் காட்டிக்கொள்ள விரும்பினேன். அவையெல்லாம் என்ன புத்தகங்கள் எனக் கேட்டேன். 'மகாத்மா காந்தியின் சுயசரிதம்', 'புத்தரின் வாழ்க்கைச் சரிதம்', 'விவேகானந்தரின் ஞானதீபம்', 'கற்பில் சிறந்தவள் கண்ணகியா? மாதவியா? இவைகள்தான் என்ருர். சரி கற்பில் சிறந்தவள் கண்ணகியா? நாஞ? என அவரைக் கேட்டேன். இதில் என்ன சந்தேகம்? நீதான் கற்பில் அரசி என்ருர். இதுதான் அவர் சொன்னவை என்ருள்.

அந்த மாணவர் உண்மையில் உன்னைக் கற்பில் அரசி என்று சொன்ஞரா?' எனக் கேட்டேன். உண்

மையில் அவர் கற்பில் அரசி என்றுதான் சொன்னார், என்றாள். ஒரு எழுத்தைச் சேர்த்து கற்பில்லா அரசி என உன்னைக் குறிப்பிட்டிருக்கவேண்டும், என நான் சொன்னேன். முற்காலத்தில் நிறைய மனிதர்களைக் கொன்றவனைத்தான், வெற்றிவீரன் என அழைத்து இருக்கின்றனர். அதேபோல் நான் எத்தனையோ நல்ல வாலிபர்களின் கற்பையெல்லாம் அழித்துள்ளேன், ஆகவே என்னை கற்பில் அரசி என்று கூப்பிட்டதில் எந்தத் தவறுமில்லை. நான் பிறரின் கற்பை அழிக்கும் வகையில் அரசிதான் என்றாள்.

எப்படி உண்மையை அப்படியே ஒத்துக்கொள்கிறாய்? என்றேன். ஒரு பெரிய கொலையாளியிடம் தான் செய்த கொலையைச் சொல்ல அஞ்சலாமா? அவனின் உள்ளத்தில் இடம்பெற வேண்டுமென்றால் நாம் செய்த கொலைகளைச் சொன்னால்தான் நம்மை உயர்ந்தவனாக நினைப்பான். நான் ஒன்றுமே கொலை செய்யவில்லை என்றால், நீ எதற்குமே லாயக்கற்றவள் என்று கூறிவிடுவான். அதேபோல் உன்னிடம் உண்மையைச் சொல்வதில் என்ன பயம்? புனிதமான தெய்வத்திடமோ, மனிதனிடமோ, தான் செய்தத் தவற்றைச் சொல்லப் பயப்படவேண்டும். நீதிபதி முன்னால் சொன்னால் தண்டனை அளித்துவிடுவார் எனப் பயப்பட வேண்டும். உன்னிடம் என்ன பயம் என்றாள்.

மாலா, நான் ஒன்று கேட்கிறேன். கோபித்துக் கொள்ளக்கூடாது என்றேன். கேளுங்கள் என்றாள்.

உனக்குத்தான் அலுவலகத்தில் சம்பளம் வருகிறதே அது உனது உணவுக்கும், உடைக்கும் போதுமே. அப்புறம் ஏன் இந்த நரகவாழ்க்கையை நடத்திக் கொண்டுள்ளாய் என்றேன் நான். நான்வசதியோடு வாழ ஆசைப்படுகிறேன். அந்த வசதியை அமைத்துக் கொள்ள அந்தச்சம்பளம் போதவில்லே. உழைக்காமல் சம்பாரிக்கக்கூடிய ஒரு தொழில் இதுதான் என்ருள். பாவமில்லேயா? என்றேன் நான். இதில் என்னபாவம். அவனே ஓடிவருகிருன். அப்புறம் என்ன? என்ருள். புரு தானேவந்து வலேயில் வீழ்ந்தது, என்று கூறுவதற் கொப்ப இருக்கிறது உன்கூற்று. நீ வலேயை விரிக்காமல் இருந்தால் அந்தப் புரு விழுமா? அதேபோல் நீ தாவணியைப் பறக்கவிட்டு உன் உடலேக்காட்டாமல் இருந்தால் அந்த மாணவன் தன் கற்பை அழித்துக் கொண்டு செல்வானு? என நான் கேட்டேன்.

என்ன நல்ல விஷயமாகவே பேசுகிறீர்கள்? ஆச்சரியமாய் இருக்கிறதே என என்னேத் தன் அருகில் இழுத்துக்கொண்டாள். இப்போது டானிக் என்றுகூறிக் கொண்டு விற்கப்படும் மதுகாஷாயம் போட்டுக் கொண்டுவந்தேன். அதனுல்தான் ஏதோ பிதற்றிவிட்டேன். தவறு இருந்தால் மன்னித்துக்கொள் மாலா, என்று அவள் மடியில்படுத்தேன். இதில் ஒன்றும் தவறு இல்லே. ஒருசிலர் மனிதனுய் இருக்கும்போது நல்லதையே பேசுவதில்லே. குடித்துவிட்டு, மிருகநிலேயில் இருக்கும்போதுதான் நல்லதையே பேசுவார்கள். கெட்டதையே செய்வார்கள். நீ அந்தவகை மனிதன்

என்றுள் மாலா. சரி என்னவோ எனச் சொல்லி விட்டுப் படுத்து விட்டேன்.

அப்போது கதவின் ஓரத்தில் ஒரு உருவம் தென்பட்டது. யார் அது? எனக் கேட்டுக்கொண்டே என் ஆடையைச் சரிப்படுத்திக்கொண்டேன். ஆனால் மாலாவோ அப்படியேக் கிடந்தாள். எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. மாலா, ஒரு பெரியவர் வருகிறுர், ஆடையைச் சரிபடுத்திக்கொள் என்று கூறினேன். கசாப்புக் கடைக்குள்ளே பசுவா வரும்? பூனைதான் வரும் என்று பட்டென்று கூறினுள். என் தலை அவரைக் கண்டவுடன் சுற்றிற்று. கையில் தடி, நெற்றியில் விபூதிப்பட்டை, தலையோ மொட்டை, பொக்கைவாய், குழிவிழுந்த கண்கள், காசால் நிரம்பிய பை. அதைக் கண்டபோது ஐயோ! நம்நாடு எவ்வளவு வேகமாக இறுதியை நோக்கிப் பயணம் செய்கிறது என எண்ணியவனுய், போய்வருகிறேன் எனச் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

இது இறந்த வீடு. இங்கு போய்வருகிறேன் எனச் சொல்லக் கூடாது. இங்கு வராமல் இருக்கும்வரை நல்லகாலம். வர ஆரம்பித்துவிட்டால் வாழ்வே கெட்டுவிடும் எனப்பொக்கை வாய்க்கிழவன் சொன்ன சொற்கள் என்காதில் விழுந்தன. சரி, அவன் குடித்து விட்டுப் பேசுகிறுன்போல் இருக்கிறது என எண்ணியவனுய் நடக்க ஆரம்பித்தேன். குமார் நீ எப்பொழுது வேண்டுமானுலும் வரலாம் என்ற மாலாவின் குரல் கேட்டது. என்னமோ ஒன்றுமே கேளாதவன்போல் பயணத்தைத் தொடர்ந்தேன்.

ஒரு பெரிய வெளிச்சம் என் முகத்தில் பட்டது. போலீஸ்காரர்தான் பேட்டரிலைட்டால் அடிக்கிறாரோ என எண்ணியவனாய் வேகமாக நடக்க ஆரம்பித்தேன். அது ஒரு மோட்டார்பைக்கின் விளக்கு என்பதைப் பக்கத்தில் சென்றவுடன் தான் அறிந்தேன். அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம்பேய், என்ற பழமொழி தத்ரூபமாய் எனக்கு விளக்கப்பட்டு விட்டதை அப்போது உணர்ந்தேன். பகல் சென்று விட்டது என்பதை எரிந்துகொண்டிருந்த இரவு விளக்குகள் சுட்டிக்காட்டின.

இன்று அரசு எனக்கு ஏழுரூபாய் சம்பளம் தந்து விட்டது. அந்த சம்பளத்திற்குரிய வேலையைத்தான் செய்யவில்லை என எண்ணியவனாய் வீட்டை நோக்கி நடந்தேன். ஒரு வாலிபரை விரட்டிக்கொண்டிருந்தார் போலீஸ்காரர். அவரின் பக்கத்தில் சைக்கிளும் நின்றுகொண்டிருந்தது. அந்த வாலிபர் ஒரு அப்பாவியாய் காட்சியளித்தார். அவருடைய பணிவும், பேச்சும் அவர் கடந்த நூற்றாண்டில் வாழ்ந்திருக்க வேண்டியவர் எனச் சொல்லாமல் சொல்லின.

இங்கேயெல்லாம் சைக்கிளில் லைட்போடாமல் போகக்கூடாது. நீ லைட்போடாமல் சைக்கிளில் சென்றாய். ஆகவே நட போலீஸ் ஸ்டேஷனுக்கு என்று அந்தவாலிபரைப்போலீஸ்காரர் மிரட்டிக்கொண்டிருந்தார். அதுதான் தெருவிளக்கு எரிகிறதே. அந்த வெளிச்சம் போதாதா? அத்தோடு எங்க ஊரிலெல்லாம் அமாவாசை இருட்டில்கூட அந்த மண்ரோட்

டில் லைட் இல்லாமல்தான் செல்வேன். அங்கேயெல்லாம் போலீஸ்ஸ்டேஷனுக்கு நட என்று யாரும்சொல்வதில்லை. இங்கே இந்த சிமெண்ட் ரோட்டில் தெரு விளக்குகள் பிரகாசமாய் ஒளியைக்கக்கிக் கொண்டிருக்கும்போது சைக்கிளில் சென்றால் என்னங்க சார் என்று கண்ணீர் வடித்துக்கொண்டே கூறினன்.

அதைக் கவனித்துக் கொண்டிருந்த என்னைப் போலீஸ்காரர் கூப்பிட்டார். என்னங்க என்று நடுங்கி கொண்டே சென்றேன். நான் நடுங்கக் காரணம் மாலாவின் வீட்டில் செய்த தவறுதான். என்ன சார் எனக் கேட்டுக்கொண்டே அருகில் சென்றேன். இந்த ஆள் லைட் இல்லாமல் வந்தான். போலீஸ் நிலையத்திற்கு நட என்று சொன்னால் நடக்க மறுக்கிறன். மாமூலும் தர அவனுக்குத் தெரியவில்லை என்றர்.

உடனே போலீஸ்காரரை நோக்கி மூக்கு வேண்டுமா? கண் வேண்டுமா? எனக் கேட்டேன். அவர் கண்தான் வேண்டுமென்றர். சரி கண்ணைக் கொடு அவருக்கு என வாலிபரை நோக்கிச் சொன்னேன். காசு தருகிறேன். கண்ணை மட்டும் தரமாட்டேன் என்றன். சரி கண்என்பது அவருக்கு என்ன என்று புரியவில்லை எனஎண்ணிக்கொண்டு இரண்டுரூபாயை அவரிடம் கொடு என்று சொன்னேன். உடனே இரண்டு ரூபாயை எடுத்துக் கொடுத்தார் சிவப்புத் தொப்பிக்கு. சரி போய்வா எனச்சொல்லி சிவப்புத் தொப்பி நகர்ந்தது.

சார், இன்று காலையில் ஒரு வேசி முகத்தில் விழித்தேன்· அதனுல்தான் சார் இன்று போலீஸ்காரன் என்னைப் பிடித்துக் கொண்டான். எப்படியோ கடவுள் வடிவில் வந்து என்னைக் காப்பாற்றி விட்டீர்கள் சார். என்னமோ அவரை மூக்கு வேண்டுமா? கண் வேண்டுமா எனக் கேட்டீரே அதற்கு என்ன சார் அருத்தம் என்றுன்.

கண் என்ருல் இரண்டுரூபாய் இலஞ்சம். ஏனென்ருல் இரண்டு கண்ணல்லவா இருக்கிறது. மூக்கு என்ருல் ஒருரூபாய் இலஞ்சம். பாம்பை மயக்க வேர். பதவியில் உள்ளவனை மயக்கப் பணம். புரிகிறதா என்றேன் நான். புரிகிறது சார் என்ருன் அவன். உன் பெயர் என்ன எனக்கேட்டேன். சேகர் எனச் சொன்ஞன். எங்கே போகவேண்டும் என்றேன். பண்ணையூருக்குச் செல்லவேண்டும் என்ருன் சேகர். இந்தத் தெருவழியே சென்ருல் இது பண்ணையூர் ரோட்டோடு போய் இணையும் என்றேன்.

வணக்கம், போய்வருகிறேன் எனச்சொல்லிவிட்டு சைக்கிளில் ஏறி சவாரி செய்துகொண்டு போஞன். சேகர் சொன்ன சொற்கள் என் காதில் ஒலித்தன. இன்று காலையில் வேசிமுகத்தில் விழித்ததால் போலீஸ்காரரிடம் சிக்கிக்கொண்டேன் என அவன் சொன்ன வார்த்தைகள் என் காதில் எதிரொலித்தன. அது எனக்கு ஆச்சரியமாய் இருந்தது· வேசி முகத்தில் விழித்ததற்கே போலீஸ்காரர் பிடித்துக்கொண்டார் என அவன் கூறுகிருன். ஆனுல் வேசியுடனேயே

நாள்முழுவதும் வாழும் எனக்கு ஒரு தண்டனைகூட கிடைக்கவில்லையே என எண்ணினேன். நாயைக் கொன்ற ஒரு அப்பாவி மனிதன் தண்டனையைப் பெற்றுக்கொள்கிறான். பல மனிதர்களைக் கொன்ற பணக்காரன் பல்லக்கில் பவனிவருகிறான். அதேபோல் தான் நானும் பவனி வருகிறேன் என எண்ணியவனாய் நடந்து கொண்டு இருந்தேன்.

ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தால் சேகர் சைக்கிளோடு ஒரு போலீஸ்காரனுடன் நின்று கொண்டிருந்தான். பக்கத்தில் சென்றேன். இவரை உங்களுக்குத் தெரியுமா? எனப் போலீஸ்காரர் என்னைக் கேட்டார். தெரியும் என்றேன். லைட் இல்லாமல் வந்தார். நட போலீஸ் நிலையத்திற்கு என்றேன். அவசரமாக இறங்கி பாக்கெட்டிலிருந்து இந்தா கண் என்று கொடுத்தார். கண் என்பது துப்பாக்கியோ எனப் பயந்து கையை நீட்டினேன். உள்ளே இரண்டு ரூபாய் இருந்தது. ஏய்யா, பணத்தைத் தருகிறாய் எனக் கேட்டேன். இது மாமூல். சும்மா கதைவிடக் கூடாது என்று ஏளனமாகப் பேசினார். இவர்மேல் இப்பொழுது இரண்டு குற்றங்கள். ஒன்று லஞ்சம் கொடுக்க முயன்றது, இன்னொன்று லைட் இல்லாமல் வந்தது என்று போலீஸ்காரர் சொல்லிமுடித்தார்.

சார் கோபிக்காதீர்கள். முன்னால் ஏதாவது ஒரு போலீஸ்காரர் லஞ்சம் வாங்கிக் கொண்டு விட்டிருப்பார். அதே எண்ணத்தில் உங்களுக்கு லஞ்சம் கொடுத்தால் விட்டுவிட்டுப் போகிறார் என எண்ணியிருக்கக் கூடும். ஒரு போலீஸ் லஞ்சம் வாங்கு

வதைப் பார்த்துவிட்டு எல்லாப் போலீசாருமே லஞ்சம் வாங்குபவர்கள்தான் என்ற தப்பு அபிப்பி ராயம் இவர் உள்ளத்தில் ஏற்பட்டு உள்ளது. மன்னி யுங்கள் என்றேன். இப்படி லைட் இல்லாமல் நகரத் தினுள் செல்லக்கூடாது எனச்சொல்லி விட்டு அந்தப் போலீஸ்காரர் தன் டைனமோ உள்ள பழைய சைக்கிள் வண்டியில் ஏறி எங்கள் முன் சென்றார். அப்படியே இரண்டு பர்லாங் தூரம் சென்றோம். போலீஸ் குவாட் டர்ஸ் வந்தது. முதல்வீடு அவர் வீடுதான்.

அந்தப் போலீஸ் நின்றிருந்தார். பக்கத்தில் அவரின் மனைவி கிழிந்த சேலையோடும், மெலிந்த உட லோடும் நின்றிருந்தாள். வறுமையின் நிலையினைக். காட்டும் படம் போல ஐந்தாறு குழந்தைகள் நின்று கொண்டிருந்தனர். நேர்மையாய் வாழ்பவர்க்கு அந்த நேர்மை அளித்திருக்கும் பரிசைப் பார்த்தாயா? என சேகரிடம் சொன்னேன். அயோக்கியனுக்குத்தான் சார் காலம் என்றான் சேகர்.

சரி என் வீட்டில் தங்கிவிட்டு காலையில் உன் வீட்டுக்குப் போகலாம் என அவரை என் விட்டுக்குக் கூட்டிச் சென்றேன். சேகர் உங்களைப் பற்றி அறிந்து கொள்ளலாமா? என்றேன். நான் விவசாயம் பார்த்துக் கொண்டுள்ளேன். எனக்கு அப்பாவும், அம்மாவும் உள்ளனர். ஒரு தங்கை உள்ளாள். அவள் பெயர் சாந்தி என்றான். வீட்டை அடைந்தோம். நான் நுழைந்தது கண்டு அண்ணா என மீனா ஓடிவந்தாள். பக்கத்தில் அவரும் நிற்பதைக் கண்டு எங்கிருந்து தான் நாணம் வந்ததோ தெரியவில்லை. ஓடிவிட்டாள்.

முக்கிய வேலையாக என் அன்னை பக்கத்துத் தெருவுக்குச் சென்றுவிட்டார்கள். மீனு தான் எங்கள் இருவருக்கும் பரிமாறினுள். சேகரின் கண்ணும் மீனு வின் கண்ணும் சந்தித்துக் கொண்டன. அதை நான் கவனித்துக் கொண்டிருந்தேன். கொஞ்சநேரத்தில் மீனு அவருடன் கலகலப்பாக பேச ஆரம்பித்து விட்டாள்.

மீனு சிறிது நேரம் கழித்து பால் கொண்டு வந் தாள். பெரிய டம்ளரில் உள்ள பாலை அவருக்குக் கொடுத்தாள் என் தங்கை. பால் மட்டுமா? இல்லை டம்ளருமா? என நான் கேட்டேன் மீனுவை. ஏன் நான் கூடத்தான் என வேகமாகச் சொல்லிவிட்டு, தப்பாய் பேசிவிட்டதாக எண்ணிக்கொண்டு தன் உதட்டைக் கடித்துக்கொண்டாள் மீனு. சிறிது நேரத்தில் மாடியில் படுக்கை விரிக்கப்பட்டது. நானும் சேகரும் சென்று படுத்தோம்.

காலைக்கடனை முடித்துவிட்டு பல்லை விளக்கிக் கொண்டு குளித்தோம் சிற்றுண்டியை முடித்த பிறகு போய்வருகிறேன் என அம்மாவிடமும், மீனுவிடமும் என்னிடமும் சொல்லிவிட்டுப் புறப்பட்டார். கொஞ்ச நாளில் சேகரின் தாய் தந்தையார் பெண் கேட்க வந்தனர். சேகர் மீனு இருவரின் திருமணமும் நடந் தது. நான் மீனுவைப் பார்க்கச் சேகரின் வீட்டுக்கு அடிக்கடி சென்று வந்தேன். சேகரின் தங்கை சாந்தி என்னை விரும்புகிறுள் என்பதைப் புரிந்து கொண் டேன். அலுவலகத்தில் தான் வேலை பார்த்து வந்தேன்.

பல நாட்களாக நானும் ஆபீசரும் லஞ்சம் வாங்கிக்கொண்டிருந்தோம். பல நாள்திருடன் ஒரு நாள் அகப்பட்டே தீருவான் என்ற பழமொழிக்கொப்ப ஒரு நாள் இருவரும் பிடிப்பட்டோம். கணவனை எப்படியாவது விடுதலை செய்யவேண்டும் என என் கள்ளக் காதலியாம் ஆபீசரின் மனைவி கண்ணீர் விட்டாள். கோர்ட்டில் வழக்கு நடந்து கொண்டு இருந்தது. வழக்குக்குத் தேவைப்பட்ட பணத்தையெல்லாம் தவருன வழியில் சென்று எப்படியோ சம்பாரித்துக் கொண்டிருந்தாள். குற்றம் அனைத்தையும் என் மேல் போட்டுக் கொண்டு ஆபீசர் குற்றமற்றவரென விடுதலையாக உதவி செய்தேன். எனக்கு ஆண்டு கடுங்காவல், தண்டனை கிடைத்தது.

தண்டனைக்காலம் முடிந்த பிறகு சுதந்தரப்பறவையாக வெளியே வந்தேன். வந்தவுடன் ஆபீசரின் மனைவி என்ற வலையை நோக்கிப் பறந்தேன். பலநாள் அவளின் வீட்டிற்குத் தொடர்ந்து சென்று கொண்டே இருந்தேன். வலையில் சிக்கியது இல்லாமல், பல சீக்குகளையும் சிக்க வைத்துக்கொண்டேன். இவனுக்குத் திருமணம் செய்து வைத்தால் திருந்திவிடுவான் என என் அன்னையும், தந்தையும் முடிவு செய்தனர். பெண் பார்க்கும் படலம் தொடர்ந்தது. யாருமே பெண் கொடுக்க முன்வரவில்லை. நான் ஒரே பையன் என்பதால் பெரிய பணக்காரர்களெல்லாம் கொடுக்க முன் வரவில்லை.

எனக்குத் திருமணமே நடக்கக்கூடாது. யாருமே பெண் கொடுக்க முன்வரக்கூடாது என எல்லா இறை

வர்களையும் வேண்டிக் கொண்டேன். நான் இப்போது சாதாரணக்குமார் அல்ல. பல நோய்களின் பேங்காக வாழும் குமார். என்ன நோய் என்பதை பின்னால் கூறுகிறேன். ஆகவேதான் திருமணமே வேண்டாமென எண்ணினேன். நான் திருந்தி வாழாவேண்டும் என்ற எனது பெற்றோரின் குறிக்கோளின் முன்னே நான் சொல்ல முடியாமல் தவித்தேன். எனக்குநோய், அதனால் திருமணம் வேண்டாமென்று என் பெற்றோரிடம் சொன்னால் இறந்தாலும் இறந்து விடுவார்களென எண்ணினேன். திருமணம் முடிந்தவுடன் மனைவிடம் எல்லாவற்றையும் சொல்லிவிடுவோம் என எண்ணிச் சும்மா இருந்தேன். என் தங்கை மீனுவின் முயற்சியால் சாந்தி என் மனைவியாக்கப்பட்டாள்.

நான் பல இரவுகளைச் சந்தித்துவிட்டு முதல் இரவில் நிழைந்தேன். சந்திக்கோ அதுதான் முதல் இரவு அந்த முதல் இரவில் கணவனாகப் பழகினேன். அண்ணனாக நடந்து கொண்டேன். நான் சொல்ல நினைத்த செய்தியை சொல்ல முடியவில்லை. நாளை சொல்லிக் கொள்ளலாமென சும்மா இருந்தேன். சாந்தி என்னிடம் நன்முறையில் நடந்து கொண்டாள். அரசாங்க வேலை பறிபோனதால் வியாபாரம் செய்யப் பழகிக் கொண்டிருந்தேன். வியாபாரத்தில் எங்கும் கலப்படம். அரிசியில் நெல்லைக் கலப்பது, நெல்லில் கல்லைக் கலப்பது, பாலில் நீரைக் கலப்பது. இப்படி எத்தனையோ கலப்படங்கள். கெட்டித்தயிர் எனச் சொல்லி பால்பவுடர் தயிரை ஊற்றுவது, நெய்

யெனக் கூறி டால்டாவை ஊற்றுவது, மிஞ்சிப்போன இன்றைய சாதத்தை, நாளைய தயிர் சாதம் என மாற்றுவது, இன்றைய மிஞ்சிப்போன இட்டிலியை நாளைய உப்புமாவாய் ஆக்குவதுபோன்ற எத்தனையோ அக்கிரமங்களை நான் வேலைபார்த்தக் கடைக்காரர் செய்தார். நோயின் கொடுமை வளர்ந்தது. சில கடைகளில் குஷ்டரோகிகளும், எலும்பு உறுக்கி நோய் உள்ளவர்களும், யானைக்கால் வியாதி உள்ள வர்களும்வேலை பார்த்து வந்தனர். ஆனால் நான் இந்த நோயோடு வேலைபார்க்க விரும்பவில்லை. வேலையை விட்டு விலகினேன்.

தனக்கு ஒரு குழந்தை வேண்டும் என்ற ஆசை ஒவ்வொரு பெண்ணுக்கும் இருக்கத்தானே செய்யும். அந்த ஆசை என்மனைவிக்கு இருக்காதா? என்ன? ஆனாலும் நான் அவளோடு உறவாட விரும்பவில்லை. நான்தான் நோயாளியாயிற்றே. என் நோய் அந்தப் புனிதவதிக்குப் பரவக்கூடாது என்பது எனது ஆசை. நோயின் தன்மை வளர்ந்தது. உடலெல்லாம் ஒரே சுருக்கங்கள். என்னைப் பார்த்துக் கொள்ள எனக்கே அருவருப்பாய் இருந்தது.

ஒரு நாள் என் அருகில் வந்தாள். அத்தான் என்றாள். என்ன என்றேன். வெட்கமாய் இருக்கிறது சொல்ல என்றாள். அப்போது அவளின் முகத்திலே ஏற்பட்ட மாற்றங்கள், உதடின் துடிப்புக்கள், கண் களின் கனிவுநிறைந்த பார்வை, அவள் நின்ற கோலம் இவையெல்லாம் கண்டபோது அது சிதம்பரம்

நடராசர்கோயிலில் உள்ள சிவகாமியின் தோற்றத் தைத்தான் நினைவுபடுத்தியது. எனக்கு ஒரு குழந்தை வேண்டும் என்று, சின்னக்குழந்தை மிட்டாய் கேட் டதைப்போல் என்னைக் கேட்டாள். அவள் இந்த அசிங்கமான உலகத்தைப் பொறுத்தவரை, அவள் ஒன்றையும் அறியாக் குழந்தைதான். சாந்தி, பக்கத்தில் வா என்றேன். வந்தாள். இன்னும் இரண்டு ஆண்டுகளுக்கு உன்னோடு சேர்ந்து இல்லறம் நடத்தக்கூடாது. அப்படி நடத்தினுல் என் உயிருக்கு ஆபத்தாம் என நான் பொய் புளுகினேன். ஆபத்தா எனக் கத்தியே விட்டாள்.

அத்தான் அப்படியென்றால் இரண்டு ஆண்டுக்கு இல்லறமே நடத்த வேண்டாம். எனக்கு இப்பொழுது குழந்தை வேண்டாம். எனக்கு நீங்கள்தான் வேண் டும் என்றாள். நான்தான் உன்னுடையவனாயிற்றே என்றேன் நான். தனக்கு உரிமையான பொருளை அடிக்கடி எனக்கு அது உரிமையானது, உரிமை யானது என்று கூறிக்கொள்வதில் ஒரு ஆனந்தம் ஏற் படுகிறது. அப்படிப்பட்ட ஆனந்தத்திற்காகச் சொன் னேன் என்றாள்.

இரண்டு ஆண்டுகள் கழிந்தன. இல்லறத்தைத் துவக்கலாமா? எனச் சாந்தி கேட்டாள். எல்லா இறைவன் கோயிலுக்கும் சென்றுவந்து துவக்கலாம் என்றேன். விரதத்தோடுப் புறப்பட்டாள் சாந்தி. இறைவனே எனக்கு ஒரு மகவுகொடு. என் கணவ னுக்கு நல்ல சுகத்தைக் கொடு என்று எல்லாக்கோயி

விலும் வேண்டினுள். சீர்காழிச் சென்ருேம். அங்கு வீற்றிருக்கும் அப்பனையும் அம்மனையும் தரிசித்தோம். அந்தக் கோயில் மிகவும் சுத்தமாக இருந்தது. ஞானப்பால் உண்ட சம்பந்தரை வணங்கினுள். என் வயிற்றில் எப்பொழுதப்பா பால் வார்ப்பாய் எனக் கேட்டாள். சிதம்பரத்தில் ஆடுகின்ற இறைவனைப் பாடி வணங்கினுள். நீ ஆடு இறைவா. என் கணவனை ஆட்டி வைக்காதே என வேண்டினுள். ஏழு மலைக்குமேல் வீற்றிருக்கும் ஏழுமலையானை வணங்கினேம். இறைவா என் கணவனைக் காப்பாற்று என்று வணங்கினுள். கோபம் தணிந்து முருகன் தனிகையிலே உள்ளான். என்னைக் குற்றத்திலிருந்து தணியவை என நான் வணங்கினேன். காஞ்சி காமாட்சி, மதுரை மீனுட்சி, சமயபுரம் மகமாயி, மைசூர் சாமூண்டீஸ்வரி போன்ற எல்லாத் தெய்வங்களையும் வணங்கினுள். கோபத்தால் ஆண்டியாகி நிற்கின்ருன் மலையிலே. நான் உணர்ச்சியால் நோயுற்று வாழ்கின்றேன் உலகிலே. எல்லாத் தலங்களுஞ் சென்று எங்களூர் திரும்பினேம்.

இல்லறத்தைத் தொடங்கலாமா? எனக் கேட்டாள் என் சாந்தி. கேள்விகள் தொடர்ந்தன. நான் பதிலே பேசவில்லை. நோயின் தன்மை வளர்ந்தது. உடலெல்லாம் ஒரே சுருக்கங்கள்' என்னைப்பார்த்துக் கொள்ள எனக்கே அருவருப்பாய் இருந்தது. என் விரல்கள் அழுதன. என் உடல் வளர்ச்சியின் கோலத்தைக் கண்டு என் தந்தை வெதும்பினுர். பொங்குகின்றபால் அடுப்பிலேயே விழுந்து தன்னை அழித்துக்

கொள்வதைப்போல் என் நிலையைக்கண்டுக் குமுறி ஞர். அந்தக் குமுறலோடு இறந்துவிட்டார். என் அன்னையின் குங்குமமும் அத்தோடு சென்றுவிட்டது. என்மனைவி தன்னல் இனி, குழந்தையைப் பெறமுடியாது எனத்தீர்மானித்து என்னையே குழந்தையாக்கிக் கொண்டாள். என் புண்ணுடலை பொன்னுடல் எனக் கூறினள். அந்தப் புண்களையெல்லாம் தன் பொற்கைகளால் சுத்தப்படுத்தினள். அத்தான், அத்தான் என ஆட்டுக்குட்டிப்போல் சுற்றிச்சுற்றி வந்தாள்.

ஒருநாள் என் அருகில் வந்தாள். ஏன் அத்தான் இந்தக்கோலம்? நான் கேட்கக்கூடாது என்றுதான் இருந்தேன். ஆனல் இப்பொழுது கேட்டுவிட வேண்டும்போல் தோன்றிற்று. கேட்டேன், எனக் கண்ணிலே நீர்வழியக் கேட்டாள். சாந்தி அழாதே அம்மா. என் கண் கண்ணீரை வடிக்கிறது. புண்கள் புண்ணீரை வடிக்கிறது. இப்பொழுது நீயும் நீரை வடித்தாள் எனக்கு யார்தான் ஆதரவு கூறுவார்கள் என்றேன் நான். நீங்கள் எவ்வளவு துன்பப்படுகிறீர்கள் என்பதை ஒவ்வொரு இரவும் கவனிக்கிறேன். கணவனும் மனைவியும் உடலும் உயிரும் போன்றவர்கள். எனது உயிராகிய தாங்கள் துன்பப்படும் போது என்னல் கண்ணீர் வடிக்காமல் இருக்க முடியுமா? என்ருள்.

நீ கண்ணகிதான் சாந்தி, என்றேன். அத்தான் அந்தப்புகழ் வார்த்தைகளெல்லாம் எனக்கு எதற்கு? உங்கள் வாழ்க்கை ஏன் இப்படி மாறியது என்று கேட்கிறேன் என்ருள். சொல்லக்கூடாத பாதையில் சென்

றேன். பெறக்கூடாத நோயைப் பெற்றேன். இப்போது வாழத்தெரியாமல் விழிக்கிறேன். அதனால் என் மனைவியாம் தெய்வத்தை வாழவைக்கமுடியாமல் தவிக்கிறேன் என்று அழுதேன். அந்தப் புனிதத் தெய்வம் என் கண்ணீரைத் துடைத்தது. எப்படிச் சாந்தி என்னை உன்னால் அருவருப்பில்லாமல் தொட முடிகிறது என்றேன். நீங்கள் என் தெய்வம். உங்களுக்காக ஆண்டவனால் அனுப்பட்ட ஒரு உருவம். உங்களோடு பின்னிப் பிணைந்து வாழ்வதில்தான் நிம்மதி. உங்களின் இன்பத்தில் பங்குகொள்ளவேண்டும் என்ற இனிய எண்ணத்தோடுதான் நான் உங்களை மணந்தேன். நீங்களே துன்பத்தில் துவளும்போது நான் எங்கே இன்பத்தில் நீச்சலடிப்பது. துன்பத்தில் மிதந்து கொண்டிருக்கும் உங்களுடன் நானும் சேர்ந்து மிதக்கலாம் என எண்ணித்தான் உங்களைத் தொடர்கிறேன். உங்களுக்கு பணிவிடை செய்வதில் என்ன அருவருப்பு என்றுள். சாந்தி, ஒருசில மனைவிகள் தன் கணவனிடமுள்ள பணம் சென்றவுடன் ஒதுக்கித்தள்ளி விடுவதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் நீ என்னிடம் உள்ள பணம் சென்ற பிறகும், அங்கமே அழுகிக் கொண்டிருக்கும் நேரத்திலும், அத்தான் என்று அன்போடு உபசரிக்கிருயே என்று வினவினேன். என்னை எத்தனையோ பெண்கள் மிருகமாக மாற்றினுர்கள். நீ இப்போது தெய்வமாக வந்து என்னை மனிதனுக மாற்றிக்கொண்டிருக்கிருய் என நான் கூறினேன்.

என்ன நீ படித்துள்ளாய்? என்றேன். துவக்கப் பள்ளியில் சில வகுப்புக்கள் என்றுள். சாந்தி படித்

தால் பண்பாடு வளர்ந்துவிடும் என்பது, பவுடர் பூசி ஞல் அழகு வந்துவிடும் என்பதைப்போன்றது. பாரீஸ் போய்ப் படித்த பெண்ணுக்குக்கூட உன்னிடமுள்ள ப்ண்பாடு இருக்குமா? என்றுதான் கேட்கிறேன். சாந்தி, நான் நேற்றுத்தெருவிலே நடந்து போன போது ஐந்தாறு படித்த பெண்கள் என்னைப்பார்த்துச் சிரிக்கிருர்கள் என்றேன்.

கண்ணீர் விட்டாள். ஏன் சொல்ல வருத்தமாய் உள்ளதா? உன்னைப்பார்த்துச் சிரிக்காமல் என்ன செய்யச்சொல்கிருய் என்று கேட்கிருயா? சொல் சாந்தி. அழுதுகொண்டே வீட்டினுள் ஓடினுள் என் சாந்தி. காலம் யாரைப்பற்றியும் கவலைப்படாமல் ஓடிக் கொண்டே இருந்தது.

என் உடலின் அளவுகள் குறைந்துகொண்டே வந்தன. விரலின் அளவும் குறைந்தது. அவைகளி லிருந்து நீர் வழிந்துக்கொண்டே இருந்தது. விரலுக்குத் துணியால் கட்டுப்போட்டுக்கொண்டேன். உடம்பை மூடிக்கொண்டேன். நாற்றத்தைப் போக்க வாச னைப் பொருளைக் கொட்டிக்கொண்டேன். அந்தச் செயற்கை வாசனையை, என் உடலில் தோன்றிய இயற்கை நாற்றம் தோற்கடிக்க ஆரம்பித்தது. அந்த நாற்றத்திலும் எனக்கு நன்முறையில் பணிபுரிந்து வந்தாள் என் மனைவியாம் சாந்தி. எனக்காகப் பிறர் துன்பப்படுவதை எண்ணி வருந்தினேன். அவர்களைத் துன்பத்தில் ஆழ்த்தக்கூடாது என்ற எண்ணம் என்னுள் மேலோங்கியது. என் அன்னை கண்ணீரில்

மிதந்து கொண்டிருந்தார்கள். அந்தக் கண்ணீரின் வருகைக்குக் காரணம் நான்தான்.

ஒரு நடு இரவில் எழுந்தேன். ஏன் அவர்களுக்குத் தொந்தரவாய் இருக்கவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியது. வீட்டை விட்டு வெளியேறத் தீர் மானித்தேன். என் அசிங்கக் கால்களைப் பிடித்தவாறு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள் என் மனைவி. மெதுவாக என் காலை விடுவித்துக்கொண்டு எழுந் தேன். அம்மனைப் போல் அமர்ந்து தூங்கிக்கொண்டி ருந்த அந்தப் புனிதவதியை வணங்கினேன். பிறகு அன்னையின் கால்களைத் தொட்டுக் கும்பிட்டேன். என் தந்தையின் போட்டோவை சிறிதுநேரம் பார்த்துக் கொண்டே நின்றேன். எல்லோருக்கும் வணக்கம். இனிமேல் இந்த மிருகத்திற்காக தெய்வ மாகிய நீங்களெல்லாம் துன்பப் படவேக்கூடாது. இது வரை நான் செய்த பாவங்களுக்குப் போதிய நோ யைப் பெற்றுக்கொண்டேன். இன்னும் நான் இங்கே இருப்பேனேயானால் நான் பல துன்பங்களுக்கு உங்களை உள்ளாக்குவேன். பிறகு அந்தப்பாவம் எப்போது கழியும் என என் மனத்திற்குள் சொல்லிக்கொண்டு புகைவண்டி நிலையத்தை நோக்கிப் பயணமானேன்.

நத்தை செல்லும் பாதையெல்லாம் ஈரத்தை ஏற் படுத்திச் செல்வதுபோல, நான் நடந்துவந்த பாதை யெல்லாம் ஈரப் புள்ளிகள் விழுந்திருந்தன. எல்லாம் என் காலில் புண்களில் இருந்து வடிந்த சீழால் ஏற் பட்ட புள்ளிகள்தான் அவை. டிக்கெட் வாங்காமல்

நிலையத்தினுள் நுழைந்தேன். அங்கே என்னைப்போல் ஒரு பெண் குஷ்டரோகி அமர்ந்திருந்தாள். உற்றுப் பார்த்தேன். அது வேறுயாருமல்ல. என் பழைய கள்ளக்காதலியாய் வாழ்ந்த ஆபீசரின் மனைவிதான். சீ, என்று காரித் துப்பினேன். ஏன் தம்பி காரித் துப்பு கிருய்? என அவள் கேட்டாள்.

நீ விதைத்த விதை என் உடலில் எப்படி முளைத் திருக்கிறது பார்த்தாயா? என என் உடம்பைக் காட்டி னேன். அவள் புண்களின் நீரோடு, கண்ணீரையும் விட்டாள். நீ குமார் என்பதை நான் அறிவேன். என் கைகள் ஆசையோடு தழுவிக்கொண்ட உடம்பல்லவா உன் உடம்பு. எல்லாம் என் உணர்ச்சி என்ற வெறி அளித்த பரிசு இது. ஆண்டவனின் ஆட்சி நடந்து கொண்டுதான் உள்ளது என்பதற்கு ஒரு சாட்சி நான். செய்த தவறுக்கெல்லாம் ஆண்டவன் தக்க தண்டனை யைக் கொடுத்துள்ளான் என தன் உடம்பைக் காட்டி ஞள். என்னைவிட அவளுக்கு நோய் அதிகம் என்ப தைப் புரிந்து கொண்டேன்.

கற்பு என்பது மிகவும் முக்கியம் என்று பெரியவர் கள் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. முன்பெல் லாம் இளம்பெண்கள் தவருன பாதையில் சென்ருல் கற்பு போவதுடன், கர்ப்பம் வந்துவிடுமே எனப் பயப் பட்டனர். இப்போதுதான் கர்ப்பத்தடை மாத்திரை களும், மருந்துகளும் வந்துவிட்டதால் கர்ப்பம் வராமல் அவர்களால் தடுத்துவிட முடிகிறது. அதனுல் பிறர் கண்களிலிருந்து களங்கத்தை மறைத்துவிட முடிகிறது

கற்புப் போவதைப் பற்றித்தான் யாருமே கவலைப் படுவது இல்லையே. கேட்டால் அது சோறு போடுகிறது எனக் கேட்கிறார்கள். இந்தக் காலத்தில் பயம் பயந்து விட்டது. அதனால்தான் நான் கெட்டேன் என்று கூறினேன்.

புகையை விட்டுக்கொண்டு புகைவண்டி வந்தது. நான் ஒரு பெட்டியில் ஏறினேன். அவள் ஒரு பெட்டியில் ஏறினாள். புகைவண்டி பெருஞ் சத்தத்தை எழுப்பிக்கொண்டு கிளம்பிற்று. அயோக்கியன் ஒருவன் ஏறியிருக்கிறான் என்பதால்தானோ என்னவோ, அப்படிப் பெருஞ்சத்தத்தை எழுப்புகிறது என எண்ணினேன். பல நிலையங்களைத் தாண்டி, அதிகாலை பத்துமணிக்குத் திருச்சிச்சந்திப்பை அடைந்தது. வண்டியைவிட்டு இறங்கி சுரங்கப்பாதையின் வழியே வந்து கொண்டிருந்தேன். அங்கு ஒரு குஷ்டரோகி படுத்துக்கொண்டு, 'உனக்கும் கீழே உள்ளவர் கோடி நினைத்துப்பார்த்து நிம்மதி நாடு' என்று பாடிக் கொண்டு இருந்தான். நான் ஸ்டேஷனுக்கு வெளியே வந்தேன். அங்கே ஆபீசரின் மனைவி கீதா நின்று கொண்டிருந்தாள்.

இருவரும் சேர்ந்தே பஸ்டான்டை நோக்கி நடந்தோம். அங்கு ஒரு துணியை விரித்துப்போட்டு அமர்ந்தோம். எங்களைச் சிலர் பரிதாபமாகப் பார்த்தார்கள். சிலர் பரிதாபமாகப் பேசினார்கள். மிருகங்கள் அமர்ந்திருக்கின்றன என்று ஒருவர் ஏளனச்சிரிப்புச் சிரித்தார். சிரித்து வாழலாம், பிறர்சிரிக்க வாழக்கூடாது என்று நான் எப்போதோ பேசியபேச்சு என் ஞாபகத்

திற்கு வந்தது' பிறர் பரிதாபப்படும் நிலைக்கு வந்து விட்டேனே என எண்ணிவருந்தினேன். ஓரிருவர் நாங்கள் விரித்து வைத்திருந்த துணியில் காசைப் போட்டனர். இந்த வாழ்வு வாழ்வதற்கு, இறந்துவிடலாமே எனக்கூட எண்ணினேன். எப்படி இறப்பது. இறப்பது என்பது கோழையின் செயலாயிற்றே.

சிறிது காசு சேர்ந்தது. அதைக்கொண்டு உணவு வாங்கிவரச் சென்றேன் ஹோட்டல் கடைக்கு. இந்தாருங்கள் காசு, உணவு போடுங்கள் என்றேன். சோறு உனக்குக் கிடையாது என்றார். காசுக்கு என்றேன். காசுக்குத்தான் என்றார். ஏன் கிடையாது எனக்கேட்டேன். நீ குஷ்டரோகி எனக் கூறினார் அந்த ஹோட்டலின் உரிமையாளர். குஷ்டரோகிக்கும் வயிறு இருக்கிறது. அந்த வயிறுக்கும் பசி எடுக்கும். அந்தப் பசியும் உணவு போட்டால்தான் அடங்கும் என்றேன் நான். பெரிய குற்றங்களைச் செய்து பெரும் வியாதியை வாங்கிக்கொண்டுள்ளாய், ஆகவே உனக்கு உணவு கிடையாது என விரட்டினார். என் நிலையை எண்ணிச் சிரித்தேன். 'இதுவும் வேண்டுமடா, உனக்கு இன்னமும் வேண்டுமடா' என அசரீய வாக்குப்போல ரேடியோ பாடிற்று. ஆம் நான் செய்த குற்றத்திற்கு இன்னமும் தண்டனை வேண்டுமென எண்ணிக்கொண்டு நடந்தேன்.

கல்லூரியிலே வேண்டுமென்றே அதிக உணவை வாங்கி இலையை மூடிவிட்டு வருவேன். ஏன் அப்படிச் செய்தாய் என இப்போது என்னைக் கேட்பீர்கள். எச்சி

ுக்காக பல ஜீவன்கள் வெளியே காத்துக்கொண்டிருப்பதை பல நாள் கண்டேன். ஒரு நாள் அங்கு சென்றேன். எச்சி உணவை உண்ணலாமா? எனக் கேட்டேன் அங்கு நின்றிருந்த ஒரு பெண்ணை. சாமி வயிறு பசிக்குது. அதுக்குப் போய் எச்சி, நல்லதுன்னு பார்த்துகிட்டு இருந்தா எங்க ஏழை வயிறு காய்ந்து போய் விடும். சாமி ஏழையாய் பிறந்திட்டா நாங்க நாய்கள் மாதரிதான். அது மாதிரி கிடைத்ததை உண்கிறோம். அதேமாதிரி நன்றியுடனும் இருக்கிறோம் என்றாள். பாப்பா, இனிமேல் ஒரு இலை நிறைய உணவுடன் வரும் அந்த இலை என் இலையாகத்தான் இருக்கும் எனச் சொல்லிவிட்டு வந்து அன்றுமுதல் நிறைய உணவோடே இலையை மூடி வந்தேன். அந்த உணவு கூட இப்பொழுது எனக்குக் கிடைக்கவில்லையே என வருந்தினேன். நான் வைத்துள்ள காசு, நாய் வைத்துள்ள தேங்காய்க்குச் சமமே என எண்ணிக்கொண்டேன்.

முற்றிய நெற்பயிர் தன் தலையைக் கீழே போட்டுக் கொள்வதைப் போல் நான் தலையைக் கீழே போட்டுக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன். எனக்கு ஒரு எண்ணம் தோன்றிற்று. பசியால் வாடிக்கொண்டு, பாதையில் அமர்ந்திருந்த பையனைக் கூப்பிட்டேன். அருவருப்போடு என்னருகே வந்து, என்ன அய்யா? என்றான். நீ அந்தக்கடையில் போய் உணவை வாங்கி வா என இரண்டு ரூபாயைக் கொடுத்தேன். அவன் சரி எனச்சொல்லி ஓடினான். பசி அவனை ஓடவைக்கிறது என எண்ணியவனாய் அமர்ந்தேன். உணவோடு

காக் வேண்டிய அளவு உணவை எடுத்துக்கொள் என்றேன். அவன் தன் கிழிந்த அழுக்குத்துணியில் கொட்டிக் கொண்டான். ஏழைக்கு வயிற்று நிறைவு தானே முக்கியம்.

உணவை நானும் கீதாவும் நாய்போல் உண்டோம். கையில்தான் புண்ணும் சீழும் உள்ளதே. இருவரும் தனித்தனியாக பிச்சைவாங்க நினைத்தோம். இருவரும் ஒன்ருய் அமர்ந்திருந்தால் கொஞ்சம்தான் காசு கிடைக்கிறது என எண்ணியதால் இந்தத் திட்டத்தைத் தீட்டினேம். இரவில் மெயின் காட்கேட்டில் சந்தித்துக் கொள்வது என முடிவு செய்தோம். நான் ஒரு பக்கமும் கீதா ஒரு பக்கமும் பிச்சைக்குப் புறப்பட்டோம்.

என்னேடு கல்லூரியில் படித்த சங்கர், ஜங்ஷனில் ஸ்டேஷன் மாஸ்டராக வேலைபார்த்து வந்தான். அவனை நான் அடையாளம் கண்டு கொண்டேன். அவனுல் என்னை யார் என அறிந்து கொள்ளமுடியவில்லை. நான்தான் என் தோற்றத்தில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டேனே. நல்லவனுக வாழ்ந்திருந்தால் சங்கரைப்போல் ஒரு நல்ல வாழ்க்கையை நடத்திக்கொண்டு இருக்கலாமே என எண்ணிக் கண்ணீர்விட்டேன்.

தவருன பாதையில் சென்றதால் தவியாய் தவிக்கிறேன் என எண்ணிக்கொண்டேன். அம்மா பிச்சை, அய்யா பிச்சை என அழுதுகொண்டே கேட்டேன். இரக்கம் கொண்ட நல்லவர்கள் எடுத்தெறிந்தனர்

குளிக்கலாம் என எண்ணி நானும் கீதாவும் காவிரியை நோக்கி நடந்தோம். இந்த உலகமக்கள் உயர்ந்த அழகான பொருளை ஆசையோடு பார்த்துக் கொண்டிருப்டார்கள். மிக மோசமான பொருளையும் அருவருப்போடு பார்த்துக் கொண்டிருப்பார்கள். அப்படி நாங்கள் இருவரும் நடந்து போனபோது எல்லோரும் எங்களைப் பார்த்தார்கள். சங்கீத வித்வான்கள் போல ஈக்கள் என்னைச்சுற்றி இசைஎழுப்பிக்கொண்டே இருந்தன. இனிப்பைச் சுற்றும் ஈக்கள் அசிங்கத்தைக் கண்டாலும் வலம் வருகின்றனவே என்று எண்ணியவனாய் காவிரியை நோக்கி நடைபோட்டுக்கொண்டிருந்தேன்.

காவிரியை அடையும்போது எனக்கு அலுப்பு மேலோங்கிவிட்டது. சிறிதுநேரம் அமர்ந்தோம். காவிரித்தாய் தன் நீரால் பாடிக்கொண்டிருந்தாள். சற்றுநேர ஓய்வுக்குப்பின் இருவரும் காவிரியினுள் குளிக்க ஆரம்பித்தோம். நீரிலே மலர் மிதந்துவந்தது. அதற்குப் பின்னால் மலமும் மிதந்துவந்தது. நான் உடம்பில் கட்டுப்போட்டிருந்த துணிகளையெல்லாம் அவிழ்த்தேன். அவை ஒரே நாற்றமாய் இருந்தது. அவையெல்லாம் நீரிலே மிதந்து சென்றன. அந்த மலத்தைவிட மோசமானவை இந்தத் துணிகள் என எண்ணினேன்.

இந்தாங்க என்று கூப்பிட்டாள் கீதா. எங்களுக்குள் இப்போது ஏதோ ஒரு தெய்வீகப்பிணைப்பு. அவள் இல்லாமல் நான் இல்லை. நான் இல்லாமல் அவள்

இல்லை என்ற ஒரு நிலை. இது எப்படி ஏற்பட்டது என்பதை என்றால் விவரிக்க முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் தெரிந்தது. உலகமே என்னை வெறுத்தது. எல்லோரும் என்னை ஏளனமாய்ப் பார்த்தனர். அந்தப் பார்வையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக என் பார்வையை கீதாவின் பக்கம் திருப்புவேன். அப்போது என்றால்தானே குஷ்டரோகியானீர்கள் என அவள் பார்வை என்னைக் கேட்கும். அது அல்ல. நான் உன்னிடம் தொடர்பு கொள்ளும் முன்பே நான் கெட்டுவிட்டேன் என என் கண் கூறும். இப்படியே பிணைந்த பார்வை நெருக்கத்தை ஏற்படுத்தின. இந்த •எண்ண அலைகளில் மோதிக்கொண்டிருந்து என்னை, அவள் கூப்பிட்ட இந்தாங்க என்ற சொல் அமைதியை ஏற்படுத்திற்று.

காவிரி ஆறு புனிதமானது. அதில் களங்கமும் குஷ்டமும் உள்ள நாம் குளிப்பதால் அதன் புனிதம் கெடாதா எனக்கேட்டாள். புனிதமான ஒரு பொருளோடு புனிதம் கெட்ட ஒன்று சேர்ந்தால் அந்தக் கெட்ட பொருள் புனிதம்தான் பெறும். இதில் நாம் குளிப்பதால் நாம்தான் புனிதம் அடைவோம். காவிரி கெடமாட்டாள் என்றேன் நான்.

இல்லீங்க. நம் உடம்பைக்கழுவி இதில் விடுகிறோம். அவை நீரில் கலந்து செல்கின்றன. சிலர் குடிக்கின்றனர். பலர் இந்நீரில் குளிக்கின்றனர். அதனால் அவர்களுக்கு நமது நோய் வந்து விடாதா? மற்றவர்களின் துன்பம் கண்ணில் இருந்து நீரைமட்டும் வரவழைக்கிறது' ஆனால் நாம் செய்த துன்பத்தால் நீர்

உடலெங்குமிருந்தும் வருகிறது. இப்படி ஓர் நிலையை மற்றவர் அடையலாமா? என அவள் கேட்டாள்.

தேள்கொட்டியது போல் எழுந்தேன். நீயும் வா கீதா என்றேன். இதில் குளிப்பது பெருந்தவறு என் பதை அறிவுறுத்தி விட்டாய் கீதா. சிலர் புனிதம்பெற இதில் வந்து குளிப்பார்கள். நமது புண்பட்ட நீர் அவர்கள் உடம்பில் பட்டால் சில நாளில் புனிதத் திற்குப் பதிலாக புண்ணைத்தான் பெறுவார்கள். இளம் வயதில் தெரியாமல் குற்றம் செய்தேன். இப்போது தெரிந்தே செய்து விட்டேன். மன்னிக்கவும் என இறைவனை வணங்கினேன். பிறகு இருவரும் மெயின் கார்டை நோக்கிப் பயணமானோம்.

இனி அப்படியே மதுரை, கன்னியாகுமரிபோன்ற இடங்களுக்குப் புகைவண்டியில் பிச்சை எடுத்துக் கொண்டே செல்லலாமென திட்டம் தீட்டினேன். அப்படியே பயணமானோம். அன்னை மீனாட்சியை வணங்கினோம். மதுரையை ஆட்சி புரிவது மீனாட்சி என்றனர் சிலர். உடனே கீதா, நான் வீட்டை ஆட்சி புரிந்தேன். அதனால் நான் அடைந்த பரிசு இதுதான் எனக்காட்டினாள், தன் குஷ்டத்தை கீதா.

கீதா இங்கு மீனாட்சி ஆட்சி புரிவதால் மதுரை நலமாக இருக்கிறது, அழகாக இருக்கிறது என்றேன் நான். நான் ஆட்சி புரிந்ததால் என்வீடு சீரழிந்து விட்டது என்றாள் கீதா. ஒரு சில பெண்கள் நாட்டை ஆள்கிறோம் எனக்கூறி, ஆட்சி வேண்டும், அதிகாரம்

வேண்டும் என்ற வெறியில் சேரக்கூடாதவர்களோ டெல்லாம் சேர்ந்து நாட்டைக்குட்டிச்சுவராக்கிய கதைகள் ஏராளம் இங்கு உண்டு என்றேன். சரி கன்னியாகுமரியை நோக்கிப் புறப்படுவோம். என்ருள். புறப்படுவோம் எனச் சொல்லிப் புறப்பட் டோம்.

இருபதுநாட்களாக ஓசிப்புகைவண்டியில் ஊரெல் லாம் சுத்திஞேம். கடைசியில் கன்னியாகுமரியை அடைந்தோம். அங்கே குமரித்தெய்வமும், கடலில் விவேகானந்தர் பாறையும் தென்பட்டன. சுற்றுலாக் காரர்கள் ஏராளமாய்ச் சுற்றிக்கொண்டிருந்தனர். முதல்நாள் குளித்துவிட்டு குமரித்தெய்வமாம், அந்தக் கன்னித்தெய்வத்தை வணங்கிஞேம்.

அடுத்த நாள் கடலில் குளித்துவிட்டு கன்னித் தெய்வத்தை வணங்கச்செல்லலாம் என கடலில் குளித்துக் கொண்டிருந்தோம். அப்போது குருக்களைப் போன்ற ஒருவர் வந்தார். ஏன்டா, இங்கே குளித்தாய்? எனத் தன் கையில் வைத்திருந்த தடியால் எனக்கு அடி கொடுத்தார். கரை ஓரத்தில் நின்றுகொண்டிருந்த கீதாவைக் கண்டவுடன் அவருக்குக் கோபம் அளவு கடந்து போயிற்று. அவளை அடித்து நொறுக்கிஞர். நான் கண்ணைப் பொத்திக்கொண்டேன். ஐயோ அடிக்கா தீர்கள், அடிக்காதீர்கள் என்று அலறிஞள். அவளை என்ஞல் எப்படிக் காப்பாற்ற முடியும். நானே ஒரு குஷ்டரோகி. அவளை அடிக்காதீர் மன்னிக்கவும் எனக் கேட்டால் எனக்கு இன்னும் அடிதான் விழும். பிறகு இருவருமே அடிபட்டு வலுவிழந்து போய்விட்டால்,

எப்படி நகரை அடைவது என எண்ணினேன். சற்று நேரம் அமைதி. குமார் காப்பாற்று, காப்பாற்று என்று ஒரு குரல். கையை விலக்கிக் கண்ணைத் திறந்தேன்.

அவள் அலையிலே அடித்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தாள். தடார் எனத் தாண்டினேன். விரல் இல்லாதக் கையாலும், காலாலும் என்னால் வேகமாய் நீந்த முடியவில்லை. மீன்கள் அரித்து எடுத்தன. உடம்பெல்லாம் சிறு ஊசியால் குத்துவதுபோல இருந்தது. குத்தட்டும். இது வேண்டிய தண்டனைதான் என்று நினைத்தாலும் இது குஷ்டரோகியின் உடம்பு என்ற ஞாபகம் வந்தது. இந்தநோய் உங்களுக்கும் வந்துவிடப்போகிறது என மீன்களைப் பார்த்துக் கேட்டேன். நான் சொல்லும் பேச்சை மனிதர்களே கேட்காத போது, மீன்கள் எங்கே கேட்கப்போகின்றன.

அலைகளின் ஓட்டத்தில் அவள் வேகமாக அடித்துச் செல்லப்படுகிறாள். நான் எனது அங்க அசைவுகளால் பின் தொடர்கிறேன். ஒருஇடத்தில் கடவுளே என்ற குரல். அவ்வளவுதான். அவளைக் காணோம். நான் கீதா எனக்கத்தினேன். நானும் கத்தமுடியாத நிலையை அடைந்தேன். தெருவிலே உலாவும்போது ஈக்கள். நீரிலே உலாவும்போது மீன்கள். இப்போது எனக்கு வலிக்கவே இல்லை. முக்கடலின் சங்கமத்தில் என் உடலும் சங்கமமாயிற்று. அந்த அலைகளிடையே நான் அலைக்கழிக்கப்பட்டேன்.

என்மனைவி, குஷ்டம் பிடித்த எனக்காக ஊரெல்லாம் அலைந்தாளாம். அலைந்து திரிந்து, சுய அறிவை

யும் இழந்து அரைப்பைத்தியமாய் அரைகுறை ஆடையுடன் குமரிக்கடற்கரையோரத்தில் அலைந்து கொண்டிருந்தாள். அத்தானைப் பார்த்தீரா? என் தெய்வ அத்தானைப் பார்த்தீரா? என்று அங்குவந்த அனைவரையும் கேள்விகேட்டுக்கொண்டே இருந்தாள்.

அரைகுறை ஆடையில் என் மனைவி அலைகிருளே என ஒருபக்கம் வருத்தம். சுய அறிவோடு இருக்கின்ற பெண்களே, ஆடையில்லாமல் அலைய முற்பட்டுவிட்டபோது இந்த அரைப்பைத்தியம் அரைகுறை ஆடையில் அலைவது என்ன தப்பு என்று எண்ணிக்கொண்டேன். அற்புதக் குணம்படைத்த கணவனையே விட்டுவிட்டு ஓடி, அவனைப் பைத்தியமாக்கும் பெண்கள் நிறைந்த இந்த உலகில் அசிங்கமான அங்கங்களையும், மோசமான நடத்தையையும் உடைய தன் அத்தானுக்காக பைத்தியம் பிடித்து அலையும் என் சாந்திக்காக நான் பரிதாபப்பட்டேன்.

'தமிழ் வாழ்க' என்றபோர்டு கடலைப்பார்த்தவாறு நின்றிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு ஆனந்தமாய் இருந்தது. தமிழோடு தமிழ்ப்பண்பாடும் என் முன்னே தோன்றிற்று.

உலகமே, நான் என்வாழ்வை அழித்துக்கொண்டதற்கு முதற்காரணம் நாகரீகம் என்ற பேயின் ஊடுருவல்தான். பண்பை வளர்க்கின்ற செயலுக்குப் பெயர்தான் உண்மைநாகரீகம். ஆனால் இப்போது ஒருவன் கொலைசெய்வதை அவன் ஆப்ரேஷன் செய்கிருன் என்று கூறுவதுபோல பண்பைக்கெடுக்கும் ஒவ்வொரு

செயலேயும் நாகரீகம் என்று அழைக்கின்றனர். நாகரீகத்தைப் பின்பற்றும் மனிதர்களே அதைப் பின்பற்றி புண்ணுகிப்போன பிண்டத்தைப் பாருங் கய்யா.

ஒரு நாட்டிற்கு முக்கியம் நாட்டுப்பற்றுள்ள மனி தர்கள். நாட்டுப்பண்பைக்காக்கும் தன்மை அதைவிட அதிகம் வேண்டும். அந்த இருபொறுப்புக்களோடு நாட்டுமொழியைக் காப்பதுகடமை. அறம், பொருள், இன்பம் என்றமூன்றில் இடையது இருப்பின் அறத்தை யும் செய்யலாம். இன்பத்தையும் பெறலாம். அதே போல் நாட்டுப்பண்பைக் காத்து வந்தோமாஞல் நாடும் காக்கப்படும், மொழியும் காக்கப்படும். ஆனல் இன்றைய உலகில் சிலர் தலையை விட்டுவிட்டு வாலப் பிடித்த கதைபோல நம் பண்பை அழித்துக்கொண்டு மொழிக்காகப் போராடுகிறேம். நாட்டின்மேல் உண் மையிலேயே பற்றிருந்தால் பண்பைக்காக்கப் போரா டுங்கள். அந்த பண்பைக்காக்கும் போராட்டம் மட் டும் நான் வாழ்ந்தபோது நடந்திருந்தால் பாதைதவறி நான் சென்றிருப்பேஞ? பண்புகெட்டு அலைந்திருப் பேஞ? என் பத்தினி சாந்தியைச் சுத்தவிட்டிருப் பேஞ? இனி நான் பேசி என்ன பயன்.

படிப்பவர்களே! கொஞ்சம் சிந்தித்துப்பாருங்கள். இந்தப் பாதை தவறியவனின் பண்பான வேண்டு கோளுக்குக் கொஞ்சம் கருணை காட்டுங்கள். அங்கே வருகிருள் பாருங்கள் என் சாந்தி. நான் கரையில் ஒதுக் கப்பட்டேன். சாந்தியின் கால்கள் என்மேல்பட்டன. அப்பப்பா இப்போது புனிதநிலையை அடைந்துவிட்ட

தாகவே எண்ணுகிறேன். என் தெய்வமாம் சாந்தியின் கால் அல்லவா என் மேல்பட்டது.

காலில் தட்டுப்பட்ட பொருளை எட்டி உதைத்து விட்டுச் செல்லும் பண்படைய மக்கள் பலரைக்கொண் டுள்ள இச்சமுதாயம் சாந்தியையும் தன்னுள்ளே கொண்டுள்ளதே என எண்ணி வியக்கிறேன். கால் பட்டுவிட்ட அப்பைத்தியம் என்னை மூன்று தடவை தொட்டுவணங்கியது. மூன்றும்தடவை தொட்டு வணங்கும்போது என் முகத்தை உற்றுப்பார்த்தது. அத்தான், அத்தான் என அலறிற்று அவள் வாய். என் முகத்தைக் கண்டவுடன் பைத்தியம் பறந்து விட்டது. பாசம் மேலோங்கிவிட்டது.

அத்தான், அத்தான் என்ற அலறல் ஒலி பெருத் தது. தன் பொற்கையால் என் உடம்பெல்லாம் நீவி னுள். புண்பட்ட உடலில் எல்லாம் தன் கண்ணீரைச் சொறிந்தாள். மொய்த்துக் கொண்டிருந்த ஈக்களை யெல்லாம் விரட்டினுள். என் தலையை எடுத்து தன்மடி மீது வைத்துகொண்டாள். அவள் மடியில் நான் குழந்தையாயினேன்.

சாந்தி நான் அயோக்கியன். உனக்குத் துரோகம் செய்தவன். உன் வாழ்வை அழித்தவன். நான் குஷ்ட ரோகி. தொடாதே. உனக்கு வந்துவிடப்போகிறது எனச் சொல்ல நினைத்தேன். பேச நா ஏழவில்லை. அதற்குள் கரையில் கூட்டம் கூடிற்று. பார் அந்த பைத்தியத்தை. அந்தப் பைத்தியம் குஷ்டரோகியை முத்தம் இடுகிறது என்று கரையில் இருந்து கத்தினர்.

அவர்களுக்குத் தெரியுமா என்னைப் பார்த்தவுடன் அவளுக்குப் பைத்தியம் போய்விட்டது என்பதையும், இந்த பண்புகெட்டவனை மணந்த மங்கை அவள்தா னென்பதையும் அவர்கள் அறிவார்களா? அவன் குஷ்ட ரோகி இங்கே வந்துவிடு பாப்பா என்று சாந்தியை அழைத்த நல்ல மனிதர்களின் குரல்களும், அவள் ஒரு காதல் பைத்தியம் எனப்பொய்ப்பலி சுமத்திய பதறு களின் குரல்களும் என் காதில் விழுந்தன. அவளைப் போய் இழுத்து வாருங்கள் என ஒரு பெரியவர் சத்தம் போட்டார். அவன் ஒரு குஷ்டரோகி. அவள் ஒரு பைத்தியம். யார் நெருங்குவார்கள் என்ற பதில்கள்.

கல்லைவீசினல் ஓடிவந்துவிடும் என அங்கிருந்த சில அறிவாளிப்பையன்களின் குரல்கள். நல்லது செய் கிறோம் என்ற நினைவில் கற்களை வீசினர் கரையில் இருந்தவர்கள். என் கற்புக்கரசியின் உடம்பில் ஏற் பட்ட காயங்களிலிருந்து ரத்தம் பீச்சிட்டு அடித்தது. பன்னீரைத் தெளிப்பது போல் அந்த பீச்சிய ரத்தம் என் மேல் பட்டது. வடிந்து கொண்டிருந்த ரத்தத்தை யும் என் உடலின் மேல் தெளித்தாள். இந்த ரத்தமும் உங்களுக்குத்தான் சொந்தமெனக் கத்தினள்.

நிறுத்துங்கள் கல்லெறியை என்ற ஒரு பெருங் குரல். கல்லெறி நின்றது. ஒரு கூட்டம் எங்களை நெருங்கி வந்தது. கண்ணகி போல் எழுந்தாள். தன் சேலை நுனியால் என் இறந்த உடலைப் பிணைத்தாள். பட்டென நெருங்கி வந்த அலையினுள் பாய்ந்தாள். சாகத்துணிந்த பெண் கல்லைக்கட்டிக்கொண்டு கிணற் றில் விழுவதைப்போல, என்னைக்கட்டிக்கொண்டு

வீழ்ந்தாள். அவள் என்னைக் கல்லாக நினைக்கவில்லை. தெய்வலிங்கமாய் நினைத்தாள். நானும், என் சாந்தியும் முக்கடல்கள் சங்கமமாகும் குமரிமுனையில் மிதந்து கொண்டிருக்கிறோம். கீதாகூட இங்குதான் மிதந்து கொண்டிருக்கிறாள்.

முக்கடலின் சங்கமத்திலே மூன்று உயிர்களும் சங்கமாகிவிட்டன. சாந்தி ஒரு புனிதமலர். நானும் கீதாவும் மலம் போன்றவர்கள். மூவரையுமே கடல் தாய் ஏற்றுக்கொண்டாள். ஆத்மாவுக்கு இறப்பு இல்லை என்பதை நான் அறிவேன். ஆனாலும் என் ஆத்மாவை நானே கொன்றுவிட்டேன். இது ஒரு இறந்த ஆத்மாவின் கதை. இந்த ஆத்மா குமரிமுனையில் ஒரு புனித ஆத்மாவோடு மிதந்துகொண்டு உள்ளது.

உங்களுக்கெல்லாம் ஒரு வேண்டுகோள். என்னைப் போலவோ, அல்லது கீதாவைப் போலவோ யாரும் வாழவேண்டாம். சாந்திபோல் வாழுங்கள். இப்படியெல்லாம் வாழக்கூடாது என்பதற்கு என்வாழ்வும், கீதாவின் வாழ்வும் ஒரு உதாரணம். இப்படித்தான் வாழவேண்டும் என்பதற்கு ஒரு உதாரணம் சாந்தியின் வாழ்வு. என்னைப்படைத்தவரின் அன்னையும், தெய்வமுமாகிய கன்னியம்மா தெய்வமே உங்களுக்கு என் வணக்கம். குமரித்தாயே, ஞானி விவேகானந்தரே உங்களுக்கும் வணக்கம். பாரதத்தாயே உன் பண்பாட்டை மறந்து, தறுதலையாய் அலைந்தேன். அதனால்தான் இந்நிலையை அடைந்தேன். மன்னிக்க

வேண்டும் என்பதற்காகத்தான் உன் காலடியில் உயிர் நீத்தேன். மன்னித்துவிடு தாயே. பாரதத்தாயே, தமிழ்த்தாயே, என்னைப்பெற்றதாயே எல்லோருக்கும் வணக்கம். என்னைப்போல் யாரும் வாழவேண்டாம். உடன் பிறப்புக்களே உங்களுக்கும் வணக்கம்.

முற்றும்.